# இறுதித் திருநபியின்



# இறுதி நாட்கள்

எம். எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்

# இறுதித் திருநபியின் இறுதி நாட்கள்

எம்.எஸ். முஹம்மது தம்பி

அன்ஸார் பப்ளிஷர்ஸ்

140, T.P.S. நகர், மருத்துவக் கல்லூரி சாலை,
தஞ்சாவூர் - 613 007. ✆ : 04362-235626
Email :ansaar_m_thamby@yahoo.com
: 94424 03708, 98947 09483



அகிலங்கள் அனைத்துக்கும் அருட்கொடையாக வந்த அண்ணல் எம்பெருமான் அஹ்மது முஜ்தபா முஹம்மது முஸ்தஃபா (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் புனித வாழ்க்கையிலேயே மனிதர்கள் யாவரும் பின்பற்றத் தகுந்த அழகிய முன் மாதிரி இருக்கிறதெனத் திருக்குர்ஆன் கூறுகிறது. திருக்குர்ஆனின் இக்கூற்றுக்குத் தெளிவான ஆதாரமாகவே திரு நபியின் திருவாழ்வு இறுதி வரையிலும் இருக்கிறது.

وَلَلْآخِرَةُ خَيْرٌ لَّكَ مِنَ الْأُولَىٰ

''உம்முடைய பிந்தியநிலை உம்முடைய முந்திய நிலையைவிட மேலானதாகவே இருக்கிறது'' என்ற இறைமறையின் (98:04) திருவாக்கின்படி, மதீனாவில் கழிந்த மாநபியின் பிற்காலம் மக்காவில் அவர்கள் கழித்த முற்காலத்தை விட மேலானதாகவே இருந்தது. வெற்றி மேல் வெற்றி சேர்ந்த பெற்றி நிறைபொற்காலமாகவே அது கழிந்தது. வேதனைகளை விலை கொடுத்து வாங்கிய சோதனை நிறைந்த வாழ்வை அவர்கள் பனிரண்டாண்டு காலம் மக்காவில் வாழ்ந்து முடித்து, மதீனாத் திருநகரில் குடியேறிய பின் மகத்தான சாதனைகளை அவர்கள் சேர்த்தார்கள். எட்டாண்டு காலத்தில் அவர்கள் தங்களின் பணியை நிறைவுபடுத்தினார்கள். மக்காவின் ஆட்சியும் அவர்க

ளின் கரங்களிலே வந்து விட்டது. அவர்களின் மாட்சியும் மக்க ளின் இதயங்களிலே ஒளிவீசியது.

களத்திலே வாகை சூடும்போது 'நான்' என்ற ஆணவத்து டன் இறுமாந்து போவது மனிதனின் இயற்கைப் பலஹீனமா கும். அந்தப் பலஹீனமே வெற்றியின் உச்சிக்கு வந்த அவனை மீண்டும் வீழ்ச்சியின் பக்கம் அழைத்துச் செல்லும். ஆனால் மனிதத் தலைவர்களின் நிலைவேறு, மாநபியின் வழிமுறை வேறு.

அளவிலா வெற்றியானது அவர்களை அணைத்து, அணி யணியாக மக்கள் அவர்களை ஏற்றிப் புகழ்ந்தபோது, அந்த மாநபி அல்லாஹ்வின் அருளையே நினைவு கூர்ந்தார்கள். வாணாளின் முழுமையையுமே சமுதாயத்துக்கு ஒரு முன்மாதிரி யாக்கி அர்ப்பணித்த நபி பெருமான் (ஸல்) அவர்களின் இறுதிக் காலமும் - இறுதி நேரமும் கூட சமுதாயத்துக்கு ஓர் அரிய முன்மாதிரியாகவே அமைந்து விட்டது. பொறுமையைத் தம் போர்வையாக்கி வறுமையைத் தம் பெருமையாக்கி வாழ்ந்த அந்த மனிதப் புனிதர் (ஸல்) அவர்கள்,

''மக்களே! உங்களில் எவரேனும் சோதனையால் சூழப்படு வாராயின், அவர் நான் பட்ட சோதனைகளை நினைவுபடுத்திக் கொள்வாராக! ஏனெனில் என்னுடைய சமூகத்தார் எவரையும் என்னுடைய துன்பங்களை விட அதிகமான துன்பங்கள் அணுக மாட்டா'' எனக் கூறியருளினார்கள்.

நேமமும் நிரந்தரமும் இல்லாத இவ்வுலகில் மரணத்தை நோக்கி ஓடிக் கொண்டிருக்கும் மனிதன் தன்னுடைய மாநபி யின் பிரிவு காலம் எவ்வாறு கழிந்தது என்பதையும் கவனிக்க வேண்டுமல்லவா? வாணாளின் எந்தப் பகலிலும் வயிறார அவர்கள் உண்டதில்லை; எந்த இரவிலும் நிம்மதியுடன் அவர் கள் உறங்கியதில்லை. பிறப்பிலும் இறப்பிலும் சமுதாயத்தின்

கவலையிலேயே அவர்களின் மூச்சானது இழைழயோடிக் கொண் டிருந்தது. அல்லாஹ்வின் அருள் அவர்களைச் சூழ்ந்து அடை மழையாகப் பொழிந்து கொண்டிருந்தது. காற்றும் மழையும் கூட அவர்களின் உதவிக்குக் காத்திருந்தன. என்றாலும்,

كُلُّ نَفْسٍ ذَآئِقَةُ الْمَوْتِ

ஒவ்வோர் ஆத்மாவும் மரணத்தைச் சுகித்தே தீரும் (29:67) என்ற இறை நியதி அவர்களுக்காகவும் தவிர்க்கப்படவில்லை யெனில், உலக வாழ்வில் மெய்மறந்திருக்கும் நம்முடைய நிலை என்னவாகும்?

சோதனை நிறைந்த இவ்வுலகச் சூழலில் மனிதனை சஞ்ச ரிக்க விட்டிருக்கும் சூத்திரதாரி தன் சூட்சுமக் கயிற்றைச் சுண்டி யிழுக்கும் நேரமே இறுதி நேரமாகும். உலக வாழ்வின் அலங்கா ரத்துக்கும் ஆடம்பரத்துக்கும் எள்ளளவும் கண்ணியமோ மரியா தையோ அப்போது அறவே இருக்காது. உற்றாரும், பெற்றா ரும், ஊராரும், உறவினரும் உதவ முடியாத அத்தருணத்தில் இறுதி நபியின் இறுதி நேர முன்மாதிரியே நமக்கு அமைதி தருமானால் - அதுவே அல்லாஹ்வின் பேரருளாகும்; இம்மை வாழ்வில் நாம் பெறும் இறுதிப் பேறாகும்.

கருணையுள்ள ரஹ்மான் தன் மேலான கிருபையைக் கொண்டு நம் இறுதி நேரத்தை அழகுடையதாக்கித் தந்தருள்வா னாக.

வஸ்ஸலாம்

எம் எஸ். முஹம்மது தம்பி

பன்னூலாசிரியர் மர்ஹூம் அல்ஹாஜ்

## எம்.ஆர்.எம்.அப்துற் -றஹீம்

அவர்கள் இந்நூலுக்களித்துள்ள

# மதிப்புரை

அண்மையில் அமெரிக்காவில் ஒரு நூல் வெளிவந்தது. அது கண்டு கிறிஸ்தவ உலகமே அதிர்ந்தது; அதனை எழுதியவர் மீது சீறிச் சினந்து கண்டனக் கணைகளைப் பொழிந்தது. இவ்வளவுக்கும் அந்நூலை எழுதியவர் ஒரு கிறிஸ்தவர்; நடுநிலை நின்று எழுதிய கிறிஸ்தவர் அவ்வளவுதான். அவர் பெயர் மைக்கேல் ஹார்ட். அவர் ஒரு வரலாற்றுப் பேராசிரியர்.

அவர் உலக வரலாற்றை மாற்றியமைக்கும் செல்வாக்கு பெற்ற ஒரு நூறு பேர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களின் வரலாறுகளைத் தொகுத்து அந்நூலில் எழுதியுள்ளார். அதில் அவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களையே அனைவரிலும் முதலிடம் பெறத் தகுதியுடையவராகக் காண்கிறார். இதுவே அவர் செய்த 'தவறா'கும். இது கண்டுதான் கிறிஸ்தவ உலகமே அதிர்ந்தது; அலறியது. எனினும் அதற்காக அவர் தாம் கொண்ட கருத்தைச் சிறிதேனும் விடவில்லை. தாம் கொண்ட கருத்து முற்ற முடிய ஆய்ந்து கண்ட முடிவேயாகும் என்று ஆணித்தரமாக எடுத்துரைத்து அது பற்றிய சர்ச்சைக்கு முத்தாய்ப்பு வைக்கிறார் அவர்.

இறைவனின் இறுதிப் பெருந்தூதராக இவ்வுலகு போந்து எவருமே பெறாத மாபெரும் வெற்றியை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பெற்ற போதினும், எவ்வாறு ஒரு பயணி சொற்ப வசதிகளுடன் ஒரு விடுதியில் தங்கியிருந்து விட்டுச் செல்வாரோ அதுபோன்றுதான் அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்து விட்டுச்

சென்றனர். அவர்களுக்காக வேண்டியே இறைவன் அகிலங்கள் அனைத்தையும் படைத்த போதினும் - இவ்வாறு நான் கூற வில்லை; இறைவனே ஹதீஸ் குத்ஸியில் அண்ணல் நபி (ஸல்) அவர்களை நோக்கி, ''லவ்லாக்க லமா கலக்த்துல் அஃப்லாக்' (நீர் இல்லையெனில் நான் அண்ட கோளங்களையும் படைத்தி ரேன்) என்று கூறுகின்றான் - அவர்கள் எளிமையில் இன்பம் கண்டார்கள்.

உலகத்தின் கருவூலங்கள் அனைத்தின் திறவுகோல்களை இறைவன் அவர்களிடமே ஒப்படைத்து அவற்றைப் பங்கு வைத்துக் கொடுக்கும் ஆன்மீக ஆட்சியையும் அவர்களுக்கு நல் கியிருந்த போதினும் - இவ்வாறு நான் கூறவில்லை; அண்ணல் நபி (ஸல்) அவர்களே 'அல்லாஹு முஉத்தி; அனகாஸிம்' (அல் லாஹ் கொடுப்பவன்; நான் பங்கு வைப்பவன்) என்று கூறுகி றார்கள் - அவர்கள் தங்களுக்கென சின்னஞ்சிறிய பங்கையே எடுத்துக் கொண்டு ஏழ்மையில் இன்பம் துய்த்தார்கள்.

அவர்களின் வாழ்வு போன்று அவர்களின் மறைவும் இருந் தது. தூய்மையும், எளிமையும் அவை இரண்டிலும் துலங்கி நின்றன. அவர்கள் இவ்வுலகில் சந்திரக் கணக்குப் படி 63 ஆண்டு கள் 3 நாட்கள் 6 மணி நேரமும், சூரியக் கணக்குப்படி 61 ஆண்டு கள் 49 நாட்கள் 6 மணி நேரமும் வாழ்ந்து விட்டுச் சென்ற போதினும், அவர்கள் விட்டுச் சென்றவை ஒரு சீப்பு, ஒரு சுரு மாக் கூடு, இரண்டு தொழுகைப் பாய்கள், ஒரு திரிகை, ஒரு சோடி செருப்பு, ஒரு போர்வை, ஒரு தஸ்பீஹ், ஓர் ஊன்றுகோல், ஒரு கேத்தல், ஒரு கீழ் ஆடை, குர்ஆனில் சில தொகுப்புகள், பல் துலக்கும் ஒரு குச்சி, ஒரு ஜுப்பா, மூன்று பாய்கள், இரண்டு சுர்மாக் கோல்கள் ஆகியவையேயாகும். இதனையே ஓர் அரபிக் கவிஞர்,

'முகல்லஃபுல் முஸ்தஃபா முஷ்துன் வமுக்ஹுலத்துன்
ஸஜ்ஜாதத் தானிரஹன் நஅலானி புர்தத்துஹு

வஸ¬ப்ஹத்துன் வஅஸா இப்ரீக்குஹ¬ வகிஸா
வமுஸ்ஹஃபுன் வஸிவாக் குன்தும்ம ஜ¬ப்பத்துஹ¬
ஹஸீரத்துன் குல்ஃதலா ஃதன்மிர் வஃதானிகமா
ஜாஅல் ஹதீதுவகத் ஸஹ்ஹத் ரிவாயத்துஹ¬

என்று பண்ணிசைக்கிறார்.

ஆனால் அவர்களோ இவற்றை விட மேலான இரண்டை விட்டுச் சென்றார்கள். இதைப் பற்றி அவர்களே 'தரக்து ஃபீக்கும் அம்ரைனி லன்தழில்லூ மாத் தமஸ்ஸக்த்தும் பிஹிமா கிதா புல்லாஹி வஸ¬ன்னத்து ரஸூலிஹி' (நான் உங்களிடையே இரு பொருள்களை விட்டிருக்கிறேன். அவை இரண்டையும் நீங்கள் பற்றி நிற்கும் வரை நீங்கள் ஒரு போதும் வழி தவறமாட்டீர்கள். (அவை) இறை மறையும் இறை தூதரின் செயல் முறையுமாகும்) என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளனர்.

அவை இரண்டுமே இன்றைய தினம் உலக மக்களின் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்காக இருக்கும் ஒரு நூறு கோடிக்கும் மேற்பட்ட முஸ்லிம்களின் இரு கண்களாக விளங்கி அவர்களை இறைவழியில், இறைவனின் திருத்தூதர் சென்ற வழியில் நடந்து செல்லுமாறு செய்கின்றன. அவ்வழியே நடந்து செல்லுவோர் வாழ்வாங்கு வாழ்ந்து வான் புகழ் எய்தப் பெறுவர் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் ஒருவரின் வாழ்வு எவ்வாறு இருக்கிறதோ அவ்வாறே அவரின் முடிவும் அமையும். இதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பெருவாழ்வும் அவர்களின் அடிதழுவி வாழ்ந்த ஆன்றமைந்தடங்கிய சான்றோர்களின் திருவாழ்வுகளும் சிறந்த சான்றுகளாகும். அவற்றையெல்லாம் ஒரு சேரத் தொகுத்துள்ள அல்ஹாஜ் முஹம்மது தம்பி அவர்கள் அவற்றின் மணிமகுடமாக அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதி நாட்களை அத்தொகுதியின் முதல் நூலாக தமிழ் கூறும் நல்லுலகிற்கு நல்குகின்றார். இதற்கு அடுத்தாற்போல் கலீஃபாக்கள், ஸஹாபாக்கள், தாபிஈன்கள், தபஅத்தாபிஈன்கள், வலிமார்கள், உல

மாக்கள், அரசர்கள், தலைவர்கள் இன்னோரன்ன பல்லோரின் இறுதி நாட்கள் பற்றிய விவரங்களடங்கிய தொகுதி விரைவில் அவருடைய பேனா முனையிலிருந்து வெளிவரவுள்ளது.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதி நாட்கள் பற்றி வரையப் போந்த ஆசிரியர் அவர்களின் சின்னஞ்சிறு அம்சங்களைக் கூட விட்டு விடாது தேடிக் கண்டுபிடித்து மணி கோத்தாற் போன்று இயற்றியுள்ளது பாராட்டத்தக்கதாகும். இதில் கோவையாக அவர் செய்திகளைக் கூறி வரும் பாங்கும் அவற்றைச் சுவைபட எழுதும் பாணியும் ஒருங்கு சேர்ந்து கை தேர்ந்த ஓர் ஓவியர் வரைந்த வண்ண ஓவியமாக இதனை ஆக்கியுள்ளன.

அவருடைய எழுத்துக்கள் நம் உள்ளத்தை நெகிழ்விக்கின்றன; நம் கண்களைப் பனிக்கச் செய்கின்றன. அவர் தம் உள்ளத்தில் ஊறிய மையைத் தொட்டு இந்நூலை எழுதி முடிக்கும் பொழுது அவர் நம் உள்ளத்தை தொட்டே விளையாடுகிறார் என்று கூற வேண்டும். அதன் காரணமாக நாமும் உணர்ச்சி மீக்குற்று,

'உலகை உய்வித்த உத்தமத் திருநபி
அலகில் சீர்த்திசேர் அண்ணலார் தம்முடை
கலைதி கழ்திரு கழல்களே நம்முடை
தலையின் மீதுநாம் தரிக்கு பொற் கிரீடமாம்'★

என்று நம்மையறியாமல் பண்ணிசைத்து அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களின் அரவிந்த மன்ன பாதங்களைப் பற்றிப் பிடித்து நம் தலை மீது சூடிக் கொண்டு கண்ணீர் சிந்தும் நிலையை எய்தப் பெறுகிறோம். இது ஆசிரியரின் கைவந்த

★ இஃது கவிஞர் முஹம்மது முஹ்யித்தீன் இயற்றிய 'முஹம்மது காசிம் உலா'விலுள்ள ஒரு செய்யுள்.

எழுத்துத் திறனுக்கோர் சான்றாகும். இந்நூல் இலக்கியத் துறையில் அவரின் இரண்டாம் ஆக்கமேயாயினும் அவரின் எழுத்துக்களிலே ஒரு பேராசிரியரின் கருவையும் திருவையும் நான் காண்கிறேன். எழுத்துலகில் ஒரு பெருமை வாய்ந்த இடம் அவருக்காக காத்திருப்பது என் மனக் கண்முன் காட்சி வழங்குகிறது. இதேபோன்று - ஏன் இதைவிட எத்தனையோ மடங்கு மாண்பார்ந்த நூல்களை யெல்லாம் அவர் எழுதி பொதுவாக, மனித இனத்துக்கும் சிறப்பாக, இஸ்லாத்துக்கும் குறிப்பாக, தமிழுக்கும் மாபெரும் பணியாற்றி இம்மை, மறுமைப் பலன்களை எய்தப் பெற வேண்டுமென்று விழைகிறேன்; இறைஞ்சுகிறேன்; இறையருள் அவர் மீது பொழியுமாக!

முு.றா.மு.அப்துற் றஹீம்

# இறுதித் திருநபியின் இறுதி நாட்கள்

வானம் இருண்டுக் கிடந்தது. வையம் இருண்டுக் கிடந்தது.

மதியிருண்டுக் கிடந்தது. மங்கையர் வாழ்விருண்டுக் கிடந்தது.

நீதியும் இருண்டுக் கிடந்தது. மாந்தர் தம் நெஞ்சமும் இருண்டுக் கிடந்தது.

'நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து,
நெடுநில மெங்கனும் பரந்து
துறவறந் தவறி இல்லற மடிந்து
சுடரிலா மனையது போல - குவலயம் இருண்டுக் கிடந்தது. தன் இருள் ஒழித்து அருள் வழி காட்டும் மெய்யொளிப் பரிதியின் தோற்றத்தை உலகம் எதிர்பார்த்திருந்தது.

மாநிலத்திற்கு மார்பகம் போன்றமைந்திருந்த மக்க மாநகரம் - புண்ணியம் நிறைந்த எத்தனையோ தீர்க்கதரிசிகள் தங்களின் பாதங்களைப் பதித்த புனித பூமி - அன்று மதுவிலே முக்குளித்து மங்கையர் மடியிலே புரண்டு, மதியை இழந்த மிருகங்கள் மனித உருவில் தன் மீது உலா வருவதைக் கண்டு அழுதது. 'ஈனமுங் கொலையும் விளைத்திட்ட பவ நோய்' தீர்த்திட ஒரு தீர்க்கதரிசியின் - தேற்றரவாளரின் - வரவுக்காக அது காத்திருந்தது!

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் 'மிக்க பாக்கியமுள்ளதாகவும் அகிலத்தாருக்கு நேரான வழி(காட்டி)யாகவும் (அல்-குர்ஆன் 3:96) அமைக்கப்பட்ட 'கஅபா' என்னும் இறையில்லம் 'ஷிர்க்' என்னும் அந்த காரத்தில் கிடந்து புலம்பிக் கொண்டிருந்தது. 'மனிதர்கள் ஒதுங்குந் தலமாகவும் அபயமளிக்கக் கூடியதாகவும்' (2:125) அல்லாஹ்வின் கலீல் இப்ராஹீம் (அலை) அவர்கள் எழுப்பி வைத்த அந்தத் திருவீடு அன்று தன் நெஞ்சத்தில், 'குஃபிர்' என்னும் கூர்வாளால் குத்தப்பட்ட கொடுமைக்காகக் குருதியை வடித்துக் கொண்டிருந்தது. ''இறைவா! அவர்களைப் பரிசுத்தமாக்கி வைக்கக் கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே அவர்களிடை எழுந்தருளச் செய்யும் நேரம் இன்னும் வரவில்லையா?'' என்ற அதன் ஏக்கப் பெருமூச்சு அரபு நாட்டின் பாலைவனத்தையே தகிக்கச் செய்து கொண்டிருந்தது.

மண்ணகத்தின் இதயப் பெருமூச்சின் மவுன ஓசை விண்ணுலகத்திலும் எதிரொலிக்கத் தான் செய்தது.

رَبَّنَا وَابْعَثْ فِيهِمْ رَسُولًا مِّنْهُمْ يَتْلُوا عَلَيْهِمْ آيَاتِكَ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ
وَالْحِكْمَةَ وَيُزَكِّيهِمْ

''எங்கள் இறைவா! உன்னுடைய வசனங்களை அவர்களுக்கு ஓதிக் காண்பித்து, வேதத்தையும் ஞானத்தையும் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்து அவர்களைப் பரிசுத்தமாக்கி வைக்கக் கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே அவர்களிடை எழுந்தருளச் செய்வாயாக'' (2:129) என இப்ராஹீம் (அலை) அவர்கள் செய்த பிரார்த்தனை இறைவனின் ஆணையை நாடி 'அர்ஷின்' அடிவாரத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

இறுதியில் ஒரு நாள் வசந்தம் வீசத் துவங்கியது. விண்ணின் வெளியில் 'மறுவிலா முழுமதி' ஒன்று பிறந்தது. மங்காப் புகழொளி பரப்ப மணி விளக்கு ஒன்று மாநிலத்தின் மண்ணிலே பிறந்தது.

பூதலத் தரசு பதியென வுதித்த
புகழ்பெறு மக்கமா நகரில்
சீதவொண் கதிர்சேர் கஅபத்துல் லாவின்
றிசையினில் வடகிழக் காக
வேதமொன் றணுகா ஜெமுறத்தி லுஸ்தா
வெனுமொரு தலத்தி னடுவே
மாதவ ரபித்தா லிபுதிரு மனையில்,

அன்னை ஆமினாவின் மணி வயிற்றில் அருமை எங்கள் நபிகள் கோமான் முஹம்மத் (ஸல்) அவர்கள் பிறந்தார்கள்.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக, இப்ராஹீம் கலீல் (அலை) அவர்களால் பிரார்த்திக்கப்பட்ட அந்தத் தூதர்,

مُبَشِّرًا بِرَسُولٍ يَأْتِي مِنْ بَعْدِي اسْمُهُ أَحْمَدُ ،

''எனக்குப் பின்னர் 'அஹ்மத்' என்னும் பெயர் கொண்ட ஒரு தூதர் வருவதைப் பற்றியும் நான் (உங்களுக்கு) நன்மாராயங் கூறுகிறேன்'' என்று அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பாக ஈஸா மஸீஹ் (அலை) அவர்களால் வாக்களிக்கப்பட்ட அந்தத் தேற்றர வாளர், தரிகெட்டிருந்த உலகின் தலைவிதியையே தாங்கள் பிறந்த பின்னால் மாற்றியமைத்தார்கள். நுபுவ்வத்தின் அந்த ஞானப் பரிதி உலகெலாம் தன் செங்கதிர் பரப்பி பாவமென்னும் கருமையை அகலச் செய்தது.

பெருமான் நபிகள் பிறந்ததன் பலனாக உறங்கிக் கிடந்த சிந்தனைகள் உணர்வு பெற்றெழுந்தன; ஓலமிட்டழுத நெஞ்சங் கள் உவகையால் பூத்துக் குலுங்கின; ஒழிந்து கிடந்தவர்கள் உயர்வு பெற்றனர்; துன்புற்றிருந்தவர்கள் துணை பெற்றனர்; துயருற்றிருந்தவர்கள் விடிவு பெற்றனர்; விதவைகள் வாழ்வு பெற்றனர்; அநாதைகள் ஆதரவு பெற்றனர்; மடமைச் சகதியிலே மதியைப் புதைத்து 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்'

என்றிருந்தவர்கள் அன்றைய தினம் 'ஒன்று இறை, ஒன்று மறை, ஒன்று நெறி' என்ற ஒழுக்கத்தைப் பெற்றனர். அறியாமை அழிந்தது, அனாச்சாரங்கள் ஒழிந்தன. அன்பிலே பிறந்த அறவழி மார்க்கம், பண்பிலே சிறந்த பெருமானின் நெறிமுறை அரபு நாடு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டு ஸிரியாவின் எல்லையிலே எதிரொலிக்கத் துவங்கியது.

## பசுமைப் புரட்சி

காலமென்னும் காட்டாற்று வெள்ளம் அறுபத்திரண்டு கணவாய்களை உடைத்தெறிந்து ஓடிக் கொண்டிருந்தது. ஆம்! அறுபத்திரண்டு ஆண்டுகளைத் தாண்டி நின்ற பெருமானார் திருநபி (ஸல்) அவர்கள் வேதனைகளைத் தாங்கி, சோதனைகளை வென்று, இஸ்லாத்தின் திருவிளக்கை ஏந்தி மதீனாவின் மண்ணிலே அடியெடுத்து வைத்தும் பத்து ஆண்டுகள் கழிந்து விட்டிருந்தன. எம்பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் வாழ்வுப் பாதையில் தாங்கள் நாட்டி வந்துள்ள சாதனைக் கம்பங்களை இப்போது திரும்பிப் பார்க்கிறார்கள்.

உண்மைக்கும், பொய்மைக்கும் வேறுபாடு தெரியாதிருந்த மக்களிடையே இன்று 'ஸித்தீக்' என்னும் ஜோதியானது ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. அருளையும் இருளையும் பிரித்தறிவிக்கும் திறனற்றிருந்தவர்கள் இன்று 'ஃபாரூக்'குகளாகப் பரிணமிக்கிறார்கள். ஏழைகள், அநாதைகள், விதவைகள், அபலைகள் ஆகிய அனைவரின் முகங்களிலும் இன்று மகிழ்ச்சிப் பூரிப்பானது பளிச்சிடுகிறது. எளியவன், வலியவன் என்ற ஏற்றத்தாழ்வழிந்து, குலபேதமும் நிற பேதமும் குழியினுள் புதைந்து, குரோதமும் விரோதமும் மண்ணோடு மறைந்து, குஃப்ரென்னும் இருளகன்று, 'ஷிர்க்' என்னும் அழுக்கு நீங்கி தவ்ஹீதின் தென்றலானது அரபு நாட்டின் பாலைகளைக் குளிர வைத்துக்

கொண்டிருந்தது. கற்றோரும், மற்றோரும், காவலரும், நாவலரும், கவிஞர்களும், சிந்தனையாளர்களும், வீரர்களும், விவேகிகளும், விவசாயிகளும், வணிகர்களும் அவர்களின் அணியில் அலையலையாய்த் திரள்கின்றனர். 'உங்களின் வரிசைகளை நெருங்கி நேராக்கிக் கொள்ளுங்கள்!' என்ற ஆணை பிறக்குந் தோறெல்லாம் பிலால் ஹபஷீயும், ஷுஐப் ரூமீயும், ஸல்மான் ஃபார்ஸியும், அபூபக்கர் குரைஷீயும் அங்கே நெருங்கி நின்று அணி சேர்த்தனர்.

மக்களின் இதயம் ஒளி பெற்றது. மண்ணும் ஒளி பெற்றது, விண்ணும் ஒளி பெற்றது, மதி குருடர் கண்ணும் ஒளி பெற்றது, மங்கையர் வாழ்வும் ஒளி பெற்றது, அந்த மாநபியின் வரவால். ஆம்! ஏழைகளின் துயரத்தைக் கண்டு, அநாதைகளின் துன்பத்தைக் கண்டு, அபலைகளின் அழுகுரலைக் கண்டு, விதவைகளின் ஓலத்தைக் கண்டு, கற்சிலை வணக்கம் கண்டு, கொலை வெறித் தாகம் கண்டு, தாங்கள் பிறந்த பூமியைப் பஞ்சமா பாதகங்களின் ஒருங்கிருப்பிடமாகவே கண்டு, ''இறைவன் அவர்களைப் பரிசுத்தமாக்கி வைக்கக் கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே, அவர்களிடையே எழுந்தருளச் செய்யும்' நேரத்தை எதிர் நோக்கி 'ஹிரா'வின் குகையிலே ஏங்கி நின்ற நாயகரின் அகமும் முகமும் கூட அன்று ஒளியேற்றுப் பரிணமித்தன. இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் 'இறைவன் ஒருவனே; அவனையே வணங்குங்கள்!' என்று சொன்ன ஒரே காரணத்துக்காக சொல்லால் ஏசப்பட்டு, கல்லால் அடிக்கப்பட்டு, உயிரையே விலை பேசப் பெற்ற - சொந்த உறவுக்காரர்களாலேயே பிறந்த மண்ணிலிருந்து விரட்டப்பட்ட பெருமானார் (ஸல்) அவர்கள், இன்று மக்காவின் அதிகாரமும், மாநிலத்தின் ஆட்சியும், புனித கஅபாவின் பாதுகாப்பும் தம் கைகளில் பெற்றிருக்க, மக்கள் சாரிசாரியாகத் தம் அணியில் திரண்டு நின்று, தம் சுட்டு விரல் அசைவை எதிர்நோக்கி நிற்பதைக் காண்கிறார்கள்.

இது அவர்களின் வாழ்விலே எத்துணைப் பெரும் சாதனை!

ஹிஜ்ரி 9-ஆம் ஆண்டு கஃஅபாவின் முழுப் பாதுகாப்பும், பொறுப்பும் அவர்களின் கைகளில் வந்து விட்டன. 10-ஆம் ஆண்டு புனித பூமியை விட்டும் நிராகரிப்பும், இணை வைப்பும் பரிபூரணமாகத் துடைத்தெறியப்பட்டு விட்டன. 'முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்' என்ற செழுமழை பொழிந்த பாக்கியத்தால் திரும்புந் திசையெல்லாம் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்ற தீன் பயிர் செழித்தோங்கிக் காட்சி தந்தது. அவர்களிலிருந்தே அவர்களிடை எழுந்தருளிய அந்தத் தூதர் அவர்களைப் பரிசுத்தப் படுத்தி விட்டார்கள். எந்த இலட்சியத்திற்காக ஆமினாவின் மணிவயிற்றிலிருந்து அப்துல்லாஹ்வின் அநாதைத் தேற்றரவாளர் பிறந்தார்களோ அந்த இலட்சியம் அன்று வெற்றி கண்டு நின்றது.

## வெற்றிச் சிந்தனை

தாங்கள் பிறந்த இலட்சியமானது பரிபூரணமாக நிறைவேறி விட்டது கண்டு நபி பெருமான் (ஸல்) அவர்கள் உள்ளம் பூரிக்கி றார்கள். இலட்சியப் போராட்டம் நெடுகிலும் இறைவன் அவர் கள் மீது சொரிந்த பரிபூரணப் பேரருளை அவர்களின் நன்றி நிறைந்த நெஞ்சம் நினைத்துத் துதிக்கிறது. அந்த நிலையில் அறு பத்து இரண்டு ஆண்டுகால முதுமையின் தளர்ச்சியானது அவர்க ளின் புயங்களை ஆரத் தழுவுகிறது. தளரத் துவங்கும் உடலின் தன்மையானது, 'வாணாளின் மாலைக் கருக்கலை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்' என்ற உணர்வை உண்டாக்குகிறது. முது மையை விட்டும், இயலாமையை விட்டும் தங்களைக் காத்தரு ளுமாறு இறைவனிடம் பிரார்த்தித்து வந்த அவர்கள் அந்த முது மையும், இயலாமையும் தங்களை அண்மி வருவதை உணர்கி றார்கள். தங்களின் எல்லாப் பிரார்த்தனைகளையும் அங்கீகரித்த

இறைவன் இதையும் நிச்சயம் அங்கீகரித்தருள் புரிவான் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இருக்கிறது. அப்படியானால், அடுத்து நடைபெறப் போவது என்ன?

ஒன்று மரணம் அவர்களை அணைக்கும். அப்படியில்லையானால் முதுமையும், இயலாமையும் என்றுமே இல்லாத நிரந்தர இளமையா கிடைக்கும்?

إِنَّكَ مَيِّتٌ وَإِنَّهُم مَّيِّتُونَ

''நபியே! நிச்சயமாக நீரும் இறந்து விடக் கூடியவரே. நிச்சயமாக (உம்மை நிராகரிக்கும்) அவர்களும் இறந்து விடக் கூடியவர்களே'' என்றல்லவா திருக்குர்ஆன் (39:30) ~~எச்சரிக்கின்~~றது. கூறுகிறது

كُلُّ مَنْ عَلَيْهَا فَانٍ
وَيَبْقَىٰ وَجْهُ رَبِّكَ ذُو الْجَلَالِ وَالْإِكْرَامِ

''பூமியிலுள்ள யாவும் அழிந்தே போகும். மிக்க கண்ணியமும் பெருமையும் தங்கிய உம்முடைய இறைவன் மட்டும் (அழியாது) நிலைத்திருப்பான்'' என்று அல்லாஹ்வின் (55:26, 27) திருவாக்கு மரணத்தையேயல்லவா உறுதி கூறுகிறது.

ஹழ்லரத் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் ஒரு நாள் கூறியதாக நபி பெருமான் (ஸல்) அவர்களே கூறியுள்ளார்கள்: ''எதுவரை நீங்கள் விரும்புகிறீர்களோ அதுவரை உயிர் வாழலாம். ஆனால் ஒரு நாள் நீங்கள் இவ்வுலகை விட்டும் புறப்பட்டேயாக வேண்டும். எவரை வேண்டுமானாலும் நீங்கள் நேசிக்கலாம். ஆனால் ஒரு நாள் அவரை நீங்கள் பிரிந்தே ஆக வேண்டும். எச்செயலையும் நீங்கள் செய்யலாம். ஆனால் ஒரு நாள் (விசாரணைக்காக) அது உங்கள் முன் வந்தேயாக வேண்டும்.''

ஆம்! நிலையில்லாத இவ்வுலக வாழ்வை முடித்து மறுமை வாழ்வை நோக்கித் தாங்கள் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கி வருவதை அண்ணலார் (ஸல்) அவர்களின் உள்ளம் அவதானிக்கத் துவங்கியது.

## முதல் ஓசை

ஹிரா மலைக் குகையில் நபி பெருமான் (ஸல்) அவர்களை நெஞ்சோடணைத்து வானவர் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் ''ஓது வீராக!'' என்று பணித்தபோது இருமுறை, ''எனக்கு ஓதத் தெரியாதே'' என்று திரும்பத் திரும்ப கூறிய பெருமானார் (ஸல்) அவர்கள்,

மூன்றாம் முறையாக வானவர் கோமான் (அலை) அவர்கள்,

اِقْرَاْ بِاسْمِ رَبِّكَ الَّذِىْ خَلَقَ ۚ‏

''படைத்த உம் இரட்சகனின் திருப் பெயரால் ஓதுவீராக!'' என்று பணித்தது முதல் ஓதத் துவங்கினார்கள். அதன் பின் நாம் நபியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறோம்; உலகைத் திருத்திய மைக்கும் இலட்சியத்திற்காகப் படைக்கப்பட்டிருக்கிறோம் என்ற பொறுப்பறிந்து, ஹழ்ரத் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் வேத வெளிப்பாடுகளைத் தங்களிடம் ஓதிக் காட்டும்போதெல் லாம், அவற்றைத் தங்களின் மனதில் அணுவளவும் தவற விடாது பதித்துக் கொள்ள வேண்டும் என்ற அச்சத்தோடு ஜிப்ர ஈல் (அலை) அவர்களின் குரலோடு குரலிணைத்து அவசர அவச ரமாக ஓதுவார்கள். தன் ஆணையை நிறைவேற்ற வேண்டிய கடமைப் பொறுப்பினாலும், தன் மீதுள்ள அச்சத்தினாலும் தன் நேசர் பெருமான் எடுத்துக் கொள்ளும் சிரமத்தைக் கண்ட இறை வன்,

لَا تُحَرِّكْ بِهِ لِسَانَكَ لِتَعْجَلَ بِهِ ۝ إِنَّ عَلَيْنَا جَمْعَهُ وَقُرْآنَهُ ۝

''(நபியே! ஜிப்ராஈல் வஹீ மூலம் ஓதிக் காண்பிக்கும் வசனங்களைத் தவறி விடுமோ என்று பயந்து அவர் ஓதி முடிப்பதற்கு முன்னர்) நீர் அவசரப்பட்டு அதனை ஓத உம்முடைய நாவை அசைக்காதீர்! ஏனென்றால் அதனை ஒன்று சேர்த்து (நீர்) ஓதும்படி செய்வது நிச்சயமாக நம் மீதுள்ள கடமையாகும்'' (75:16,17) என்று 'வஹீ' மூலம் அறிவித்தான். இந்த வஹீயின் வசனங்களை அவர்களிடம் எத்தி வைத்து, ஹழ்லரத் ஜிப்ராஈல் (அலை) அவர்கள் தாங்கள் அல்லாஹ்வின் வசனங்களை ஓதும் போது கவனத்துடன் அவற்றை மவுனமாகவே கேட்கும்படியாகவும், தாங்கள் ஓதி முடித்ததும் கேட்டதை பெருமானார் (ஸல்) அவர்கள் திரும்பவும் ஓதிக் காட்டும்படியாகவும் கூறினார்கள். அதன் பின்னால் இறுதி வரையிலும் அவ்வாறே ஜிப்ராஈல் (அலை) அவர்கள் வேத வசனங்களை ஓதிக் காட்டுவதும் அவர்கள் ஓதி முடிந்ததும் பெருமானார் (ஸல்) அவர்கள் அதனை அவர்களுக்குத் திரும்பவும் ஓதிக் காட்டுவதும் வழக்கமாக இருந்தது. திருநபியின் உள்ளத்தில் அவற்றை நிலைப்படுத்த வேண்டிய பொறுப்பை இறைவனே ஏற்றுக் கொண்டதால் அதில் ஒரு சொல்லும் கூட என்றும் விடுபட்டதில்லை.

திருநபியின் இதயத்தில் திருமறையின் பாதுகாப்பைத் தன் பொறுப்பில் ஏற்றுக் கொண்ட இறைவன் அவை மறதியால் அழிந்து விடாமல் நினைவில் நிலைப்பதற்காகவும், அப்போதைக்கப்போது மக்களின் வாழ்வைத் திருத்தியமைக்கும் தேவைக்கு ஏற்றபடி இறக்கப்படும் வசனங்களின் வரிசைக் கிரமமும், அத்தியாய அமைப்பும் அவர்களுக்குத் தெரிவதற்காகவும், மக்களின் மனப்பக்குவத்திற்கேற்றவாறு மாறுபடும் வசனங்களையும் தவிர்க்கப்படும் வசனங்களையும் அவர்கள் அறிந்து கொள்வதற்காகவும் ஓர் ஏற்பாட்டைச் செய்திருந்தான். அதன் படி ஒவ்வோர் ஆண்டும் ரமழ்லான் பிறை 11-இல் ஹழ்லரத்

ஜிப்ராஈல் (அலை) அவர்கள் திருநபி (ஸல்) அவர்களின் சமுகத்தில் வந்து அன்று வரையிலும் இறக்கப்பட்ட வசனங்களை ஆரம்ப முதல் கோர்வையாக ஓதிக் காட்டுவார்கள். அதன் பின் நபி பெருமான் (ஸல்) அவர்களையும் அவ்வாறே திரும்பவும் ஓதச் செய்துக் கேட்டுச் செல்வார்கள்.

ஹிஜ்ரி 10-ஆம் ஆண்டு ரமழ்லான் மாதம் 11-ம் இரவு வந்த ஹழ்லரத் ஜிப்ராஈல் (அலை) அவர்கள் இரண்டு முறைகள் அவ்வாறு ஓதிக் காட்டி, நபி பெருமான் (ஸல்) அவர்களையும் இரண்டு முறைகள் ஓதச் சொல்லிக் கேட்டுச் சென்றனர். வழக்கத்திற்கு மாறாக ஒரு முறைக்கு இருமுறையாக அவ்வாறு அவர்கள் செய்தது 'ஒருக்கால் அடுத்த ரமழ்லான் மாதம் நாம் உலகில் இருக்க மாட்டோமோ?' என்ற சிந்தனையைப் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஏற்படுத்தியது. ரமழ்லான் மாதங்களின் இறுதிப் பத்து நாட்கள் பள்ளியில் தனித்திருந்து 'இஇதிகாஃப்' என்னும் தவமிருக்கும் திருநபி (ஸல்) அவர்கள் அதுவே தங்களின் இறுதி ரமழ்லானாக இருக்கலாம் என ஐயம் ஏற்பட்டதால் அவ்வாண்டு இருபது நாட்கள் இஇதிகாஃப் இருந்தார்கள்.

## ஆயத்தமாதல்

(''நபியே! உமக்கு) அல்லாஹ்வுடைய உதவியும் (மக்காவின்) வெற்றியும் கிடைத்து, அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக நுழைவதையும் நீர் கண்டால் (அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டு) உம் இறைவனைப் புகழ்ந்து துதி செய்து அவனுடைய (அருளையும்) மன்னிப்பையும் கோருவீராக. நிச்சயமாக அவன் (பிரார்த்தனைகளை அங்கீகரித்து) மன்னிப்புக் கோருதலையும் அங்கீகரிப்பவனாக இருக்கிறான் - என்ற திருமறையின் 110-ஆம் அத்தியாயமே பெருமானார் (ஸல்) அவர்கள் மீது இறங்கிய முழுமையான இறுதி

அத்தியாயமாகும். இவ்வத்தியாயம் மதீனாவில் இறங்கியதாகவும், மினாவில் இறங்கியதாகவும், ஹுதைபியாவில் இறங்கியதாகவும் வேறுபாடான கருத்துக்கள் நமக்குக் கிடைத்தாலும் பொதுவாக இந்த அத்தியாயம் இறங்கிய பிறகு நபி பெருமான் (ஸல்) அவர்கள், இறைவனை அதிகமாகப் புகழ்ந்து துதிப்பதிலும், பிழை பொறுக்க வேண்டுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். இவ்வத்தியாயம் இறங்கிய பின்னர் அவர்களின் ஒவ்வொரு தொழுகையிலும் 'ருக்கூஉ' இலும் ஸஜ்தாவிலும்,

سُبْحَانَكَ اَللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَللّٰهُمَّ اغْفِرْلِي

''எங்கள் இரட்சகனான அல்லாஹ்வே! நீ மிகத் தூய்மையானவன், புகழ் அனைத்தும் உனக்கே, அல்லாஹ்வே! என்னை மன்னிப்பாயாக!'' என்று அதிகமாக ஓதி வந்ததாக முஉமின்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுவார்கள்.

''பெருமானார் (ஸல்) அவர்களின் இறுதிக் காலத்தில் எழும் போதும், அமரும் போதும், போகும் போதும், வரும் போதும் அவர்களின் திருவாயானது, 'அல்லாஹ் தூய்மையானவன், புகழனைத்தும் அவனுக்கே' என்று புகழ்ந்து கொண்டிருந்தது. 'நாயகமே! இவ்வாறு அதிமாகத் தாங்கள் ஓதுவதேன்? என்று கேட்டேன். 'எனக்கு அவ்வாறு ஓதும்படியாக ஏவப்பட்டுள்ளது' என்று கூறி இவ்வத்தியாயத்தை ஓதிக் காட்டினார்கள்'' என்று உம்முல் முஉமினீன் ஹழ்லரத் உம்மு ஸலமா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

இவ்வத்தியாயம் இறங்கிய பின்னர், 'இவ்வாண்டில் நான் மரணமடைவேன்' என்று அவர்கள் அறிவித்ததாக அன்னை உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

''இந்த அத்தியாயம் இறங்கிய போது நபி பெருமான் (ஸல்) அவர்கள்,

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَللّٰهُمَّ اغْفِرْلِي
اِنَّكَ اَنْتَ التَّوَّابُ الرَّحِيْمُ

''என்னுடைய இரட்சகா! நீ தூய்மையானவன், புகழனைத்தும் உனக்கே. அல்லாஹ்வே என்னை மன்னிப்பாயாக! நிச்சயமாக நீ மிக மன்னிப்பவனாகவும், பிழை பொறுக்கக் கூடியவனாகவும் இருக்கிறாய்' என்று அதிகமாக ஓதினார்கள்'' என்று ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பொதுவாக இந்த அத்தியாயம் இறங்கிய பின்னர் நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் மறுமை வாழ்வுக்கான தேட்டத்திலும், தெண்டிப்பிலும், எப்போதும் இல்லாத அளவுக்கு ஈடுபட்டிருந்தார்கள் என்றும், ''நான் வந்த காரியம் முடிந்து விட்டது. என் மரணத்திற்கான அறிவிப்பு கிடைத்து விட்டது'' என்று அவர்கள் கூறினார்களென்றும் ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

ஹிஜ்ரி 9-ஆம் ஆண்டில் இஸ்லாத்தின் இறுதிக் கடமையாக 'ஹஜ்' அறிவிக்கப்பட்டது. அவ்வாண்டு ஏறத்தாழ முந்நூறு ஸஹாபாக்களை ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் தலைமையில் ஹஜ்ஜு செய்வதற்காக அனுப்பி வைத்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், அவர்களைப் பின் தொடர்ந்து சென்ற ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களை அரஃபாவின் வெளியில் 'பராஅத்' என்னும் திருமறையின் 9-ஆம் அத்தியாயத்தின் நாற்பது வசனங்களை ஓதிக் காட்டி, ''இனி அடுத்து வரும் ஆண்டுகளில் அப்புனிதத் தலங்களின் எல்லைகளுக்குள் இறைவனை நிராக

ரிப்பவர்களும் இறைவனுக்கு இணை வைப்பவர்களும் அனும திக்கப்பட மாட்டார்கள்'' என்று அறிவிக்கச் செய்தார்கள். ஹிஜ் ரத்துக்குப் பின்னும் - இஸ்லாத்தின் இறுதிக் கடமையாக இறை வன் ஹஜ்ஜை விதித்த பின்னும் அதுவரை நபி பெருமான் (ஸல்) அவர்கள் தாங்கள் ஹஜ்ஜு செய்யாததனால் வாணாளின் மாலைப் பொழுதைத் தாங்கள் அடைந்து நின்ற அந்நிலையில் தங்களின் ஹஜ்ஜுக் கடமையை முடித்துக் கொள்ள வேண்டும் என்று நினைத்தார்கள்.

கண்ணியம் பொருந்திய இறைவனின் திரு வீட்டைக் கடைசி முறையாகக் கண்டு களித்து, இறையருள் பெற்ற தங்க ளின் தோழர்கள் யாவரையும் ஒரு சேரச் சந்தித்து, தங்களின் இறுதிச் செய்தியை உலகுக்குப் பறையறிவிக்க அதையே பொருத்தமான தருணமென்று தெரிந்தெடுத்த நபிகள் கோமான் (ஸல்) அவர்கள், தங்களின் முடிவைத் தோழர்கள் யாவருக்கும் அறிவித்தனர். இறுதி நபியவர்கள் அவ்வாண்டு அரஃபாவின் வெளிக்கு ஹஜ்ஜை நாடி புறப்படுகிறார்கள் என்றும் முஸ்லிம் கள் யாவரும் அவர்களோடு கலந்து கொள்ளலாம் என்றும் மஸ் ஜிதுன் னபவீயிலிருந்து ஒலித்த அழைப்பானது அரபு நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் எதிரொலித்தது.

யமன் நாட்டில் அப்போதிருந்த ஹழ்ரத் அலீ (ரலி) அவர் களுக்கும், 'தவறாமல் வந்து தங்களோடு கலந்து கொள்ள வேண் டும்' என்ற பிரத்தியேக அழைப்பு பெருமானார் (ஸல்) அவர்க ளின் தனித் தூதர் மூலம் அனுப்பப்பட்டது. பயணங்கள் செல் லும் போது தங்களின் மனைவிமார்களில் யாரேனும் ஒருவரை 'திருவுளச் சீட்டு' மூலம் தெரிந்தெடுத்து உடனழைத்து செல்லும் பழக்கமுடைய இறைவனின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் அவ் வழக்கத்திற்கு மாறாக அப்புனிதப் பயணத்தில் எல்லா மனைவி மார்களும் தங்களோடு தவறாது புறப்பட வேண்டும் என்று கட்டளை பிறப்பித்தார்கள்.

## சரணடைந்தேன் என் இறைவா!

புனிதப் பயணத்தில் பூமான் நபி (ஸல்) அவர்களோடு பங்கேற்பதற்காக மக்கள் சாரி சாரியாக மதீனாவில் திரள ஆரம்பித்து விட்டனர். நகரங்களிலிருந்தும், கிராமங்களிலிருந்தும், மலைகளிலிருந்தும், பள்ளத்தாக்குகளிலிருந்தும், அலையலையாகத் திரண்டு வந்த மக்கள் கூட்டம் மதீனாவின் வீதிகளில் நிரம்பி வழிந்தது. பல்வேறு கிளைகளையும், பிரிவுகளையும் சேர்ந்த அரபிகளையும், அஜமிகளையும் கொண்ட கூட்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்த வண்ணமிருந்தன. மதீனாவைச் சூழவிருந்த பள்ளத்தாக்குகள் முழுவதும் கூடாரங்களால் மறைக்கப்பட்டு விட்டன.

துல்கஅதா மாதம் பிறை 25 வெள்ளிக்கிழமையன்று ஜும்ஆவுக்குப் பிறகு தொழுகைக்காகக் கூடியிருந்த மக்களுக்கிடையே, மறுநாள் காலை புனிதப் பயணம் புறப்படச் சித்தமாகும்படி அறிவிக்கப்பட்டது.

மறுநாள் அதிகாலை பெருமானார் (ஸல்) அவர்கள் குளித்துப் புத்தாடையுடுத்தி, புதுமணம் பூசி, தங்களின் பள்ளியினுள் நுழைந்தார்கள். நபிமணி (ஸல்) அவர்களின் வரவைக் கட்டியங் கூறும் நறுமணம் மஸ்ஜிதுன் னபவீயைத் தாண்டி மதீனாவின் தெருக்களையும் பரவசப்படுத்தியது. காலைத் தொழுகையை முடித்த காசிம் நபி (ஸல்) அவர்கள் கருத்துச் செறிவுடன் கூடிய ஒரு புன்னகையை முகத்திலே தவழ விட்டு புதுப் பொலிவுடன் காட்சி தந்தார்கள். உற்சாகமானது மடை திறந்தோட, மதீனாவின் மக்கள் வெள்ளம் அவர்களின் கட்டளையை எதிர்நோக்கி சுறுசுறுப்புடன் காத்திருந்தது. மகிழ்ச்சியானது எல்லோர் முகத்திலும் முத்தமிட்டுக் கொஞ்சியது.

மதியத் தொழுகை முடிந்ததும் எல்லா முஸ்லிம்களும் பள்ளியின் முன் அணிவகுத்தனர். அல்லாஹ்வின் ஹபீப் (ஸல்) அவர்கள் தங்களுக்கேயுரிய அழகிய கம்பீரத்துடன் வெளிவந்தனர். அவர்களுக்கெனச் சித்தப்படுத்தப்பட்டிருந்த 'அல்கஸ்வா' என்னும் ஒட்டகையின் மீது அவர்கள் அமர்ந்ததும் பயணக் கூட்டம் நகரத் துவங்கியது. பல்லாயிரம் பேர்கள் எழுப்பிய 'அல்லாஹு அக்பர்' என்ற தக்பீரின் இடி முழக்கம் மதீனாவின் மலைகளிலும் கணவாய்களிலும் எதிரொலித்தது.

ஆறு மைல் தொலைவில் உள்ள 'துல்ஹுலைஃபா' என்னும் தலத்தை அடைந்து நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களுடன் மாலை நேர அஸர் தொழுகையை - பயணிகளுக்கு இறைவனளித்த சலுகைப்படி - இரண்டு ரக்அத்துகளாகச் சுருக்கித் தொழுது முடித்து, அங்கேயே இராத் தங்கினார்கள். ஹஜ்ஜினுடைய தினத்தில் இறைவனின் பாதையில் பலியிடுவதற்காக ஒரு நூறு ஒட்டகைகளையும் அடையாளமிட்டு சித்தப்படுத்திக் கொண்டார்கள்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலை நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் பயண ஆடைகளைக் களைந்து, குளித்து முழுகி, ஹஜ்ஜுக்காக அணிய வேண்டிய தையலற்ற இரண்டு வெள்ளாடைகளை மேலொன்றும் கீழொன்றுமாக - இஹ்ராம் அணிந்து கொண்டனர். அதன் பின் அவர்கள், இஹ்ராமுக்கென நிய்யத்துச் செய்து கொண்டவர்களாக,

لَبَّيْكَ اللّٰهُمَّ لَبَّيْكَ، لَبَّيْكَ لَاشَرِيْكَ لَكَ لَبَّيْكَ،
إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَاشَرِيْكَ لَكَ،

"சரணடைந்தேன், என் ஆண்டவனே சரணடைந்தேன். சரணடைந்தேன். உனக்கு இணையில்லை. சரணடைந்தேன். நிச்சயமாக, புகழும் அருளும் உனக்கே சொந்தம். ஆட்சியும்

உனக்கே சொந்தம். உனக்கு இணையில்லை'' என்று உரத்து முழங்கினார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களின் அந்த முதல் முழக்கம் கேட்டு இன்று 1400 ஆண்டுகள் கழிந்து விட்டன. மார்க்கத்தின் கடமைகளிலும் இறைவனின் கட்டளைகளிலும் எத்தனையோ இன்றைய சமுதாயத்தில் வெறும் சடங்குகளாகவும் ஆசாரங்களாகவும் மாறி விட்டன. இந்த நிலையிலும் ஆண்டுக்கொரு முறை அரஃபாவில் கூடும் ஹஜ்ஜாஜிகளின் கூட்டம் அதே சங்கநாதத்தை எழுப்புகையில் உணர்ச்சிகளின் கொந்தளிப்பால் மனிதன் பக்திப் பரவசத்தில் மூழ்கி பாவத்தின் கறையானது கழுவப்பட்டு வெளி வருவதை உலகம் காண்கிறது. இந்த நிலையில், தங்களின் உடலையும், உயிரையும் பணயமாக்கி வைத்து, இறைவனின் அருள் ஞானப் பாட்டையில் பயணம் செய்துக் கொண்டிருந்த அருமை ஸஹாபாக்கள் அன்றைய தினம் தங்களின் அருமந்தத் தலைவரின் தீன் முழக்கத்தை நேருக்கு நேர் நின்று கேட்டு எத்தகைய உணர்வு பெற்றிருப்பார்கள் என்பதை யார் விளக்க முடியும்? ஏறத்தாழ தொண்ணூறாயிரம் ஸஹாபாக்கள் தங்கள் நபியின் 'தல்பியா'வைத் திரும்பக் கூற, துல்ஹுலைஃபாவை விட்டும் அடிபெயர்ந்த பயணக் கூட்டம் புனிதத் திருவீட்டைத் தாங்கி நிற்கும் புண்ணிய பூமியை நோக்கிப் புறப்பட்டது. வழியெங்கும் எதிர்ப்பட்ட மலைகளிலும், கணவாய்களிலும், பள்ளத்தாக்குகளிலும் தவ்ஹீதின் புனித கீதம் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

## இடையிலே ஓர் ஊடல்

அந்தப் பயணத்தில் உம்முல் முஉமினீன் ஸஃபியா (ரலி) அவர்களின் ஒட்டகையின் மீது சுமைகள் அதிகமாக ஏற்றப்பட்டிருந்தன. அதன் காரணமாக, பயணக் கூட்டத்தோடு அது இணைந்து நடக்க முடியாமல் சற்று பின்தங்கியே வந்தது. அதே

நேரம் அன்னை ஆயிஷா நாயகியார் ஏறி இருந்த ஒட்டுகையா னது சற்று வாலிப முறுக்கோடு இருந்ததாலும், அதன் மீது சுமை களும் குறைவாகவே இருந்ததாலும் அது சுறுசுறுப்புடன் முன்னே சென்று கொண்டிருந்தது. பெருமானார் (ஸல்) அவர் கள் அதனைக் கவனித்தார்கள். உடனே ஆயிஷா (ரலி) அவர்களி டம் சுமைகளைச் சற்று மாற்றிக் கொள்ளும்படி கட்டளையிட் டார்கள். அதனைக் கேட்ட அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் பிணக்கமுற்றனர். உடனே நபி பெருமான் (ஸல்) அவர்களை நோக்கி, "பெருமானே! தாங்கள் அல்லாஹ்வின் ரஸூல் என்று தங்களைக் கூறுகிறீர்கள். ஆனால், தாங்கள் நியாயத்துக்கு மாறா கவும் கட்டளையிடுகிறீர்கள்!" என்றனர்.

இறைவனின் திருத் தூதருக்கு முன்பாக வெளிப்படையா கக் காட்டப்பட்ட இந்த அவமதிப்பால் சினங் கொண்டெழுந்த ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் விரைந்து சென்று தங்களின் மகளாரின் கன்னத்தில் ஓங்கி அறைந்தனர். அதைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் அப்படி நடந்து கொண்டதற்காகத் தங்கள் தோழரைக் கடிந்து கொண்டார்கள்.

"பெருமானே! தங்களின் முன்னிலையில் ஆயிஷா சொன் னதைத் தாங்கள் கேட்டீர்களா?" என்று சந்தேகத்தோடு கேட்ட னர் 'ஸித்தீக்குல் அக்பர்.'

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் ஆயிஷாவின் தந் தையை நோக்கி, "கேட்டேன் அபா பக்கரே! ஆனாலும் ஆயி ஷாவை நீர் மன்னிப்பீராக! ஏனெனில் ஆயிஷா ஒரு பெண் மணியே. பெண்ணின் சிந்தனையே பொறாமையால் நிரம்பிய தாகும். அந்தப் பொறாமை வெடித்துக் கிளம்பும் போது அவள் தன் நாவிலிருந்து வெளிக் கிளம்பும் சொற்களைக் கட்டுப்படுத் தச் சக்தியற்றவளாக இருக்கிறாள்" என்று அருளுரை கூறினார் கள். தமக்காகத் தம் தந்தையிடமே பரிந்து பேசும் கணவரின் அன்பானது அன்னை ஆயிஷா நாயகியாரின் உள்ளத்தை மகிழ் வித்தது. உள்ளத்தில் [illegible]க்கமும் அகன்றது.

## ஹஜ் பற்றிய வழிமுறைகள்

72 மைல்களைக் கடந்து 'ரவாஹா' என்ற தலத்தை அவர்கள் அடைந்தபோது, மற்றொரு பயணிகள் கூட்டம் அவர்களைக் கடந்தது. நபி பெருமான் (ஸல்) அவர்கள், 'அவர்கள் யார்?' என்று விசாரித்தபோது அவர்கள் தாங்கள் முஸ்லிம்கள் என்றனர். அதன் பின் பதிலுக்கு இவர்களை, 'தாங்கள் யார்?' என்று அக்கூட்டத்தினர் விசாரித்தனர். தங்களை அல்லாஹ்வின் தூதர் என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள். அவர்களில் ஒரு பெண்மணி தம் சிறுவனை பெருமானார் (ஸல்) அவர்களிடம் உயர்த்திக் காட்டி, ''இச்சிறுவன் மீதும் ஹஜ்ஜானது கடமையா?'' என்று கேட்டார். நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''இவனுடைய ஹஜ்ஜின் பலனில் உமக்கும் பங்குண்டு'' என்று விடை தந்தார்கள்.

பயணக் கூட்டம் தொடர்ந்து நடைபோட்டது. மேடான தலங்களில் மக்கள் ஏறும்போதெல்லாம் தல்பியாவை மிக உரத்த குரலில் கூறினர். அதன் காரணமாக அவர்களுக்கு ஏற்படும் சிரமத்தைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''மக்களே! உங்கள் ஆன்மாக்களுக்கு நீங்கள் சிரமத்தை உண்டாக்காதீர்கள்! ஏனெனில் நீங்கள் கேளாச் செவிடனையோ, வெகு தொலைவில் உள்ளவனையோ அழைக்கவில்லை. அவன் உங்களோடிருக்கிறான். உங்களுக்கு வெகு அருகில் இருந்து உங்கள் அழைப்பைக் கேட்டுக் கொண்டிருக்கிறான்'' என்று போதித்தார்கள்.

அதே பயணத்தில் 'துல்ஹுலைஃபா' என்ற தலத்தில் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் மனைவியாரான 'அஸ்மா பின்த் உமைஸ்' என்பவர் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்

தார். 'இப்போது தாம் என்ன செய்ய வேண்டுமென' அப்பெண் மணி நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் கேட்டனுப்பினார். பெருமானார் (ஸல்) அவர்கள், அவரை இஹ்ராமுடைய உடையிலேயே இருக்குமாறும், ஆனால் தல்பியாவைக் கூற வேண்டாம் என்றும் சொல்லி அனுப்பினார்கள்.

'அல்அர்ஜ்' என்ற தலத்தை அடைந்தபோது நபி பெருமான் (ஸல்) அவர்களுடைய பயணப் பொருள்கள் ஏற்றப்பட்டிருந்த ஒட்டகையானது வழி தவறி விட்டது. ஹழ்லரத் அபூ பக்கர் (ரலி) அவர்கள் அதனை வழி நடத்தி வந்தவரை சற்றுக் கடிந்து கொண்டனர். அதற்காக அவர் ஏதோ சாக்குப் போக்குகளைக் கூறியபோது ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் தாங்கள் இருக்கும் புனித நிலையிலும் அவரைச் சவுக்கினால் அடித்து விட்டனர். அதனைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் அருமைத் தோழரைக் காட்டி "இஹ்ராம் அணிந்த ஒரு ஹஜ்ஜாஜியின் செயலைப் பாருங்கள்!" என்று கூறி இஹ்ராமில் எவரையும் அடிக்க வேண்டாமென உணர்த்தினார்கள்.

பயணக் கூட்டம் தொடர்ந்து செல்லுகையில் ஒரு குறிப்பிட்ட இடம் வந்தபோது, 'இது என்ன பள்ளத்தாக்கு?' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

"இது 'அஸ்தக்' பள்ளத்தாக்கு" என்று கூறப்படக் கேட்ட பெருமானார் (ஸல்) அவர்கள், "இதோ என் சகோதரர் மூஸாவைத் தம் விரல்களைக் காதுகளின் துளைகளில் வைத்தவராக, தமக்கேயுரிய உரத்த குரலில் தல்பியாவைக் கூறியவராக இப்பள்ளத்தாக்கைக் கடந்து செல்லக் காண்கிறேன்" என்று கூறினார்கள்.

ஒரு மலையை அவர்கள் அடைந்தபோது, "இது என்ன மலை?" என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'ஹர்ஷ்' என்று அதன் பெயரைக் கூறக் கேட்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள், "என் சகோதரர் 'நூஹ்' அவர்களை, நீண்ட

கம்பளி ஆடையைப் போர்த்தியவராக, சிவந்த பெண் ஒட்டகை யின் மீதமர்ந்து தல்பியாவை உரத்து கூறிச் செல்லும் நிலையில் காண்கிறேன்'' என்று கூறினார்கள்.

'அஸ்பான்' என்ற தலத்தை அடைந்தபேது நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி, ''இவ்வழியாகத்தான் நபிமார்களான ஹூதும் ஸாலிஹும் செந்நிற ஒட்டகையின் மீது அமர்ந்து பயணம் சென்றனர்'' என்று கூறினார்கள்.

'ஸரிஃப்' என்ற தலத்தை அடைந்த சமயம் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு மாதாந்திர ருதுவானது வெளியாகி யது. அதுபோது அவர்களைக் காண வந்த பெருமானார் (ஸல்) அவர்களிடம் அன்னையார் அவர்கள் இது பற்றிக் குறைபட்டு ''அந்தோ இறைவன் என்னை இவ்வாண்டு தங்களோடு ஹஜ்ஜு செய்ய அனுப்பாமலிருந்தாலே நன்றாக இருந்திருக்குமே' என்று கூறிக் கண்ணீர் விட்டழுதனர். தங்கள் மனைவியாரின் அத்துயரத்தைப் போக்க நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''அவ் வாறு சொல்லாதே ஆயிஷா! ஆதமுடைய பெண் மக்களுக்கு இதுவும் அல்லாஹ்வுடைய ஓர் அருட் கொடையாகும். அவனு டைய வீட்டைச் சுற்றி வலம் வருவதைத் தவிர்த்து மற்றெல்லாக் கிரியைகளையும் நீ நிறைவேற்றலாம். அல்லாஹ் உனக்கு ஹஜ் ஜின் பலனை அளிக்கப் போதுமானவன்'' என்று ஆறுதல் கூறி னார்கள்.

அவ்வாறாக வழி நெடுகிலும், மற்றவர்களின் கண்களுக் குப் புலப்படாத அற்புதக் காட்சிகளையெல்லாம் அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் ஆன்மீகக் கண்க ளால் கண்டு விளக்கியவர்களாகவும், ஹஜ்ஜின் கிரியைகளை யும் நெறிமுறைகளையும் தங்களின் முன்மாதிரியின் மூலம் உல கிற்கு அறிவித்தவர்களாகவும் பயணம் செய்து கொண்டிருந்தார் கள்.

## புனித பூமியில்

மதீனாவை விட்டும் அவர்கள் புறப்பட்டு எட்டு நாட்கள் பயணத்தில் கழிந்தன. ஒன்பதாம் நாள் விடியலில் விண்ணின் வெளியில் செம்பரிதி தன் கதிர் விரிக்கும் அதே நேரம் 'முஹம் மத்' என்னும் அந்த ஞானப் பரிதியின் கதிரொளியானது மக்கா வின் வெளியில் தோன்றியது. தான் பெற்றெடுத்த அந்தத் தவப் புதல்வரின் வரவுக்காக திருவிழாக் கோலம் பூண்டிருந்த புனித நகரின் உள்ளே பக்தி நிறைந்த நெஞ்சத்தோடு நபி பெருமான் (ஸல்) அவர்கள் மெது மெதுவாகச் சென்றார்கள். அறியாமை இருள் நீக்கி, அருள் ஒளி தந்த அந்த ஞானத் தினகரனின் வரவுக்கு இல்லங்கள் தோறும் பூத்து நின்ற புத்தம் புது மழலை மலர்க ளெல்லாம் தங்களின் இதழ் விரித்து முகமன் கூறின. ஹஜ்ஜாஜிக ளின் அந்த மாபெரும் கூட்டத்தின் நடுவே நாயகமாகச் சுடர் வீசும் தங்களின் குலக் கொழுந்தின் திருமுகத்தைக் கண்ட 'ஹா ஷிம்' குல இளைஞர்கள் பூரித்துக் குரல் எழுப்பியவர்களாக முதியோர்களை முந்திக் கொண்டு சென்று அவர்களை வரவேற் றனர். நன்றிப் பெருக்கோடு அவர்களின் உவகைகளைப் பிரதிப லித்தவர்களாய் அவர்களின் தோள்களைத் தட்டிக் கொடுத்த பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு சிலரைத் தங்களின் ஒட்டகை யின் மீது ஏற்றி அமர்த்திக் கொண்டார்கள். மகிழ்ச்சிக் கடலின் மாபெரும் ஆரவார அலைகளினூடே ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்கள் ஒட்டகையின் கயிற்றைப் பிடித்து முன் செல்ல, கதிரவ னின் வெப்பத்தை மறைக்க ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர்கள் அண்ணலாரின் தலைக்கு மேல் தங்களின் ஆடையை விரித்துப் பிடித்து வர, அல்லாஹ்வின் அருமைத் தூதர் (ஸல்) தாங்கள் தங்க வேண்டிய இடம் வந்து சேர்ந்தார்கள்.

அதன் பின்னர் புனிதத் திருவீட்டைத் தாங்கி நிற்கும் புண்ணிய தலத்தை அடைந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், 'பாபுஸ் ஸலாம்' என்னும் வாயில் வழியாக உள்ளே நுழைந்த போது. باب السلام

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் பதினாயிரம் தோழர்கள் தங்களின் வாட்களையெல்லாம் உரையிலிட்டவர்களாய்ப் புடைசூழ, பகை தவிர்த்து, நகை முகத்தோடு அத்திரு நகரில் நுழைந்து, அதன் அதிகாரத்தைத் தாங்கள் ஏற்ற காட்சி அவர்களின் கண் முன்னே தோன்றியது. கஅபாவின் உள்ளேயிருந்த கற்சிலைகளையெல்லாம் அகற்றி, அதன் முதுகில் வரையப்பட்டிருந்த ஓவியங்களையெல்லாம் கழுவித் தூய்மைப்படுத்திச் சென்றிருந்தார்கள் அண்ணலார். 'இனி இறுதி நாள் வரையில் இணை வைப்பவனும் நிராகரிப்பவனும் இதன் நிழலிலும் நிற்க அனுமதிக்கப்பட மாட்டான்' என்றறிவிக்கப்பட்ட பின் அகிலத்துக்கு நேர் வழி காட்டும் அல்லாஹ்வின் அந்தத் திரு வீடு, அவனின் நபிமார்களும் அமரர்களும் வலம் வந்த பெருவீடு இன்று 'மனிதர்கள் ஒதுங்குந் தலமாகவும் அவர்களுக்கு அபயமளிக்கக் கூடியதாகவும்' இணையில்லாக் காம்பீரத்தோடு அருளொளி வீசி அவர்களின் பார்வையில் பட்டபோது பரவசப் பெருக்கானது அண்ணலார் அவர்களைத் திக்குமுக்காடச் செய்தது. உணர்ச்சிகளின் உந்துதலோடு,

اَللّٰهُمَّ زِدْ بَيْتَكَ هٰذَا تَعْظِيمًا وَّتَكْرِيمًا وَّمَهَابَةً

''யா அல்லாஹ்! இந்த உன் திருவீட்டின் பெருமையையும், கண்ணியத்தையும் இன்னும் அதிகரிக்கச் செய்வாயாக!'' என்று அவர்கள் உரத்துப் பிரார்த்தித்தபோது ஸஹாபாக்களின் உடல்களெல்லாம் புல்லரித்தன.

கஅபாவின் அருகே சென்ற அவர்கள் தங்களின் மேலாடையைத் தங்களின் வலக் கையின் கீழாக்கி, இடது புயத்தின் மேல் போர்த்தியவர்களாக, கஅபாவைத் தங்களுக்கு இடப்புறத்திலாக்கி, ஏழு முறை வலம் வந்தார்கள். அப்போதவர்களின் திரு நாவானது இறைவனைப் புகழ்ந்த வண்ணமும், பிரார்த்தித்த வண்ணமும் இருந்தது. ஒவ்வொரு சுற்றிலும் 'ருக்னுல் யமானி' என்னும் மூலைக்கும் 'ஹஜ்ருல் அஸ்வத்' உள்ள மூலைக்கும் இடையில் வரும்போதெல்லாம்,

رَبَّنَآ اٰتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَّفِي الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ ○

''எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு இம்மையிலும் நன்மையளிப்பாயாக! மறுமையிலும் நன்மையளிப்பாயாக! (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் நீ எங்களை இரட்சிப்பாயாக!'' (திருக்குர்ஆன் 2:201) என்று பிரார்த்தித்தார்கள். அதன் பின் ஒட்டகையின் மீது இருந்தவாறே - திருவீட்டைச் சூழ்ந்து நிற்கும் தங்களின் திருத்தோழர்களுக்குச் சங்கடம் தராமல் - தங்களின் கைத் தடியாலேயே 'ஹஜ்ருல் அஸ்வத்' என்னும் கருங்கல்லைத் தொட்டு முத்தமிட்டார்கள். அதன் பின்,

وَاتَّخِذُوْا مِنْ مَّقَامِ اِبْرٰهٖمَ مُصَلًّى

''இப்ராஹீம் நின்ற இடத்தை (விசுவாசிகளே!) நீங்கள் தொழுமிடமாக வைத்துக் கொள்ளுங்கள்'' என்ற திருமறையின் (2:125) திருவசனத்தை ஓதியவர்களாக 'மகாமு இப்ராஹீம்' என்ற தலத்தில் வந்து நின்று இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். அதன் பின் அவர்கள்,

اِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَآئِرِ اللّٰهِ

''மெய்யாகவே, 'ஸஃபா'வும் 'மர்வா'வும் அல்லாஹ்வின் மார்க்க அடையாளங்களில் உள்ளனவாயிருக்கின்றன'' என்ற

திருமறையின் (2:158) வசனங்களை ஓதியவர்களாக, ''அல்லாஹ் எதனை முதலில் குறிப்பிட்டானோ அதிலிருந்தே நாம் துவக்குவோம்'' என்று கூறி 'ஸஃபா'வென்னும் மலையை நோக்கிச் சென்றார்கள். அதன் மேல் ஏறி நின்று 'கஅபாவை' நோக்கி 'அல்லாஹு அக்பர்' என்று பலமுறை கூறினார்கள். அதன் பின்னர்,

لَآ إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ، لَآ إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ

''வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வையன்றி யாருமில்லை. அவன் தனித்தவன், அவனுக்கு இணையில்லை. உலகங்களின் ஆட்சியும் புகழும் அவனுக்கே உரியவை. அவன் எல்லாப் பொருள்களின் மீதும் ஆதிக்கமுடையவன். வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வையன்றி வேறில்லை. அவன் தனித்தவன். அவன் தன் வாக்குறுதியை நிறைவேற்றினான். தன் அடியாருக்கு அவன் உதவி புரிந்தான். தன் எதிரிகளின் படையை தனித்து நின்றே வென்றான்'' என்று புகழ்ந்தார்கள். இப்புகழ்மொழியை மும்முறை கூறியவர்களாக, 'ஸஃபா'வை விட்டும் இறங்கி கஅபாவைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவர்களாக 'மர்வா'வை நோக்கி நடந்தார்கள். இடைப்பட்ட வழியில் கஅபாவைத் தங்கள் பார்வையில் இருந்து மறைக்கும் பள்ளத்தாக்கை வேகமாக ஓடிக் கடந்தார்கள். வழி நெடுகிலும் அவர்கள்,

رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَتَجَاوَزْ عَمَّا تَعْلَمُ إِنَّكَ أَنْتَ الْأَعَزُّ الْأَكْرَمُ

''என் இரட்சகா! என் பிழைகளைப் பொறுத்தருள்வாயாக! நீயறிந்த எல்லாப் பாவங்களை விட்டும் எங்களை வெளியேற்று வாயாக! நிச்சயமாக நீ மிகக் கண்ணியமும் கிருபையும் உடைய வன்'' என்று பிரார்த்தித்த வண்ணமாகச் சென்றார்கள். பின்னர் அவர்கள் 'மர்வா' என்னும் மலை மீதேறி நின்று 'ஸஃபா'வில் ஓதிய பிரார்த்தனைகளையே அங்கும் ஓதினார்கள். 'மர்வா' மலையின் மீது பெருமானார் (ஸல்) அவர்களைக் கண்ட மக்கள் 'இதோ முஹம்மத் (ஸல்) இங்கு இருக்கிறார்கள்' என்று கூக்குர லிட்டனர். பெருங் கூட்டம் அவர்களைச் சூழ்ந்து கொண்டது. தங்களின் வீட்டு அலுவல்களில் ஈடுபட்டிருந்த கன்னிப் பெண்க ளெல்லாம் கூட, நரகப் படுகுழி நோக்கி உருண்டு கொண்டிருந்த தங்கள் வாழ்வைத் தடுத்து சுவனச் சோலையின் பக்கம் திருப்பி விட்ட நாயகத்தைக் காண வெளியில் வந்தனர். இறைவனின் திருத் தூதர் (ஸல்) அவர்கள், அவர்களுக்குக் கிடைத்த அப்பேற் றினைப் பறிக்க விரும்பாதவர்களாய் தங்களின் ஒட்டகையின் மீதேறி திருமுகங் காட்டி அருள் புரிந்தார்கள்.

அதன் பின் அவர்கள் மர்வாவை விட்டும் இறங்கி மீண்டும் ஸஃபாவை நோக்கி நடந்தனர். அவ்வாறாக ஸஃபாவுக்கும் மர் வாவுக்கும் இடையே ஏழு முறை நடந்து முடித்து, பின்னர் தங்களின் தோழர்களை நோக்கி, பலியிடப் பிராணியை அடை யப் பெற்றில்லாதவர்கள் தங்களின் இஹ்ராமை இப்போது களைந்து விட்டு ஹஜ்ஜுக்காகப் புதிய இஹ்ராம் கட்டிக் கொள் ளுமாறும், பலி பிராணிகளைத் தங்களோடு கொண்டு வந்திருப் பவர் மட்டும் அவற்றைப் பலியிடும் காலம் வரை இஹ்ராமு டைய உடையிலேயே இருக்குமாறும் பணித்தனர். ஒரு சிலர்

இஹ்ராமோடு இருக்கும் போது, தாங்கள் இஹ்ராமைக் களைய நேரிடுவது பற்றி அவர்கள் வருந்தியபோது, ''இப்போது நான் அறிவதை முன்னமேயே அறிந்திருப்பேனாகில் என்னுடைய பலிப் பிராணிகளையும் நான் மதீனாவிலிருந்து கொண்டு வந்திருக்க மாட்டேன். அவற்றை இங்கேயே வாங்கி இருப்பேன். இஹ்ராமை உங்களைப் போன்று துறந்து வெளியேறி இருப்பேன். ஆனால் இப்போது நான் அவற்றை அங்கிருந்த கொண்டு வந்து விட்டபடியால் அவற்றைப் பலியிடும் வரை நான் இஹ்ராமோடு இருக்க வேண்டி கட்டாயத்திற்குள்ளாகி விட்டேன்'' என்று ஆறுதல் கூறினார்கள்.

இதற்கிடையில் 'யமன்' நாட்டிலிருந்து ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களும் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

## அரஃபாவின் வெளியில்

துல்ஹஜ்ஜு மாதம் எட்டாம் நாள் காலைத் தொழுகையை முடித்து, தங்களின் ஓர் இலட்சத்து இருபத்து நான்காயிரம் புனித ஸஹாபாக்கள் புடை சூழ பூமான் நபி (ஸல்) அவர்கள் மினாவை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்கள். மினாவில் அன்றையப் பொழுதையும், இரவையும் கழித்து, மறுநாள் காலைத் தொழுகையையும் மினாவிலேயே தொழுது முடித்து, அரஃபாவை நோக்கிப் புறப்பட்டார்கள். அன்று ஹிஜ்ரி 10 ஆம் ஆண்டு துல்ஹஜ்ஜு மாதம் 9-ஆம் நாள் வெள்ளிக்கிழமையாக இருந்தது. அரஃபாவில் உள்ள 'நமிரா' என்ற தலத்தை அடைந்து அன்றைய பகல் தொழுகையையும், மாலைத் தொழுகையையும், ஒரே பாங்கழைப்பைக் கொண்டும் இரண்டு இகாமத்துகளைக் கொண்டும் இடையில் எவ்வித நபிலான தொழுகையும் இல்லாமல் முன்னதாகவே நிறைவேற்றிய நபி பெருமான் (ஸல்) அவர்கள் அதன்பின் நெடுநேரம் இறை தியானத்தில்

மூழ்கியிருந்தார்கள். தங்களுக்காகவும், தங்களின் தோழர்களுக் காகவும் இறுதிநாள் வரையிலும் வரவிருக்கும் தங்களின் சமுதா யத்தினருக்காகவும் கண்ணீர் விட்டழுது பிழை பொறுக்கத் தேடிய நபி பெருமான் (ஸல்) அவர்கள் பின்னர் அரஃபா மலை யின் மீதேறித் தங்களின் திருப் பார்வையை நான்கு புறமும் சுழற்றினார்கள். திரும்பும் திசையெல்லாம் அவர்களின் திருப் பார்வை எட்டும் தொலைவெல்லாம் வெள்ளாடை அணிந்த மனித வெள்ளத்தைக் கண்டும், பரமனைப் புகழ்ந்து அவர்கள் பண்ணிசைத்த 'தல்பியா'ப் பேரொலியைக் கேட்டும் புளகாங்கி தமடைந்தார்கள். அவர்களில் அரசர் யார்? ஆண்டி யார்? எளி யோர் யார்? வலியோர் யார்? அறிஞர் யார்? பாமரர் யார்? அரபியர் யார்? அரபியரல்லாதவர் யார்? என்று எவராலும் விளங்கிக் கொள்ள இயலவில்லை. ஆதமின் மக்கள் என்ற அந் தஸ்தைத் தவிர்த்து வேறொரு பெருமையும் அங்கு காணப்பட வில்லை. இறைவனை ஒருவன் என்றுரைத்த ஒரே காரணத்துக் காக எந்த நபியவர்கள் அவர்கள் பிறந்த நகரை விட்டும் பத்து ஆண்டுகளுக்கு முன் வெளியேற்றப்பட்டார்களோ அதே முஹம்மத் நபி (ஸல்) அவர்கள்தாம் அரசர்க்கரசராய், இன்று அருள் நிறைத் தலைவராய் நின்று தங்களைச் சூழ நாற்புறமும் பார்வையிடுகிறார்கள்.

ஹிஜ்ரி 9-ஆம் ஆண்டில் ஹஜ்ஜானது முஸ்லிம்கள் மீது கடமையாக்கப்பட்டபோது நபி பெருமான் (ஸல்) அவர்கள் அவ்வாண்டு ஹஜ்ஜு செய்ய வரவில்லை. தங்களின் தோழர் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களை அமீருல் ஹஜ்ஜாக ஆக்கி வைத்து முந்நூறு தோழர்களை அரஃபாவிற்கு அனுப்பி வைத்தி ருந்தார்கள். அவ்வாண்டில் இணை வைப்பவர்களும் நிராகரிப்ப வர்களும் கூட அறியாமைக் கால வழக்கப்படி அரஃபாவில் கூடியிருந்தனர். அப்போதுதான் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்க ளும் அரஃபாவுக்கு வந்து பெருமானார் (ஸல்) அவர்களின் கட்ட ளைப்படி திருமறையில் 'பராஅத்' என்னும் அத்தியாயத்தின் 40

வசனங்களை ஓதிக் காட்டி, ''இனிவரும் ஆண்டுகளில் முஸ்லிம் அல்லாத எவரும் புனித எல்லைகளில் அடியெடுத்து வைக்க அனுமதிக்கப்பட மாட்டார்கள்'' என்று பிரகடனம் செய்தார்கள். எனவே முந்திய ஆண்டில் முஸ்லிம்களோடு முஷ்ரிக்குகளும் காஃபிர்களும் கலந்திருந்த நிலையில் ஹஜ்ஜைப் பற்றிய இஸ்லாத்தின் நெறிமுறைகளும் சட்ட திட்டங்களும் விளக்கப்படவில்லை. மக்காவின் வெற்றிக்குப் பின் இவ்வாண்டே முதன் முதலாகப் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக வருகிறார்களானதால், பூமான் நபிகளோடு சேர்ந்து ஹஜ்ஜு செய்யும் புனித பாக்கியத்தை அடைய வேண்டும் என்ற ஆவலோடும், ஹஜ்ஜைப் பற்றிய இறைவனின் கட்டளைகளைப் பரிபூரணமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தோடும் அன்றைய முஸ்லிம் உலகமே அரஃபாவில் திரண்டு நின்றது. பரிதாபம்! தங்களின் அருமை நபியோடு தாங்கள் நிறைவேற்றும் இறுதி ஹஜ்ஜே அதுதான் என்பதை அவர்களில் யார்தான் அன்று அறிந்திருக்க முடியும்!

அதேநேரம் அல்லாஹ்வின் திருத் தூதர் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் வாழ்வின் இறுதியான 'ஹஜ்' அதுவே என்பதை நன்கு அறிந்தவர்களாக, ஹஜ்ஜின் நடைமுறைகளையும் தங்களின் இறுதிச் செய்தியையும் உலக முஸ்லிம் சமுதாயத்திற்கு எடுத்தறிவித்து தங்களின் கடமையைப் பரிபூரணமாக்கிக் கொள்ளக் கூடிய இறுதிச் சந்தர்ப்பமாக இதனை கருதியே வந்தார்களாதலால், அப்போதைக்கப்போது தங்களின் ஒட்டகையைச் சூழ்ந்து நின்ற ஓர் இலட்சத்து இருபத்து நாலாயிரம் ஸஹாபாக்களிடையே ஹஜ்ஜின் நெறிமுறைகளையும் மார்க்க சட்ட வரம்புகளையும் அள்ளி வழங்கி அவர்களின் உள்ளங்களில் ஆழப் பதியச் செய்து கொண்டிருந்தார்கள். ''அர்ணா என்னும் பள்ளத்தாக்கைத் தவிர்த்து அரஃபாவின் எல்லாப் பாகமும் ஹஜ்ஜாஜிகளுக்குப் புனிதத் தலமேயாகும்'' என்று அரஃபாவின் புனிதத்தை எடுத்துச் சொன்ன நபி பெருமான் (ஸல்) அவர்கள்,

''ஹஜ் என்பது அரஃபாவின் வெளியில் தங்குவதேயாகும். 'முஸ்தலிபா'வின் இரவாகிய துல்ஹஜ்ஜு மாதம் பத்தாம் இரவில் விடிவெள்ளி தோன்றுவதற்கு முன்னேயாகிலும் அரஃபாவின் வெளிக்கு ஒருவர் வந்து விடுவாராயின் அவர் ஹஜ்ஜை நிறைவேற்றினவராவார். மினாவில் தங்குதல் மூன்று நாட்களாகும். அதற்கு முன்பாகவே அங்கிருந்து புறப்பட ஒருவர் அவசரப்பட்டு விடில் அப்போதும் ஏதும் குற்றமில்லை'' என்று குறிப்பிட்டார்கள்.

அப்போது ஸஹாபாக்களிடையே அன்று நபி பெருமானார் (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கிறார்களா இல்லையா என்பது பற்றி சர்ச்சை கிளம்பியது. அதனைத் தெரிந்து கொள்வதற்காக 'உம்மு ஃபழல்' என்ற அம்மையார் அவர்கள் ஒரு குவளையில் குளிர்ந்த பானத்தை நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர். பெருமானார் (ஸல்) அவர்கள் தாங்கள் நோன்புடன் இல்லை என்பதைத் தெரிவிக்கக் கூடிய முறையில் அதனை அருந்தினார்கள்.

அரஃபாவின் வெளியில் ஒட்டகையின் மீதிருந்து விழுந்து மரணமடைந்து விட்ட ஒருவரைப் பற்றியறிந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், அவரைக் குளிப்பாட்டி இரண்டு துணிகளைக் கொண்டு போர்த்தி நல்லடக்கம் செய்யப் பணித்தார்கள். ''மறுமையில் எழுப்பப்படும்போது அவர் 'தல்பியா'வை உச்சரித்தவராகவே எழும்புவார்''என்று கூறி அவருடைய தலையை மூட வேண்டாமென்றும் அவர் மீது மணம் பூச வேண்டாமென்றும் தடுத்து விட்டார்கள்.

அலையெனத் திரண்டு நின்ற மக்கள் கடல் நடுவே தங்களின் 'அல்-கஸ்வா' என்னும் ஒட்டகையின் மீது அமர்ந்தவர்களாகப் பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு பேருரையாற்றினார்கள்.

## அருள் சாஸனம்

இறைவனைப் புகழ்ந்து துதித்து, அவனின் பேரருட் கொடைகளுக்கெல்லாம் நன்றி தெரிவித்து, பிழை பொறுக்கத் தேடிப் பிரார்த்தித்துக் கொண்ட பின், உள்ளமுருகத் தங்களின் பேச்சைத் துவக்கிய அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள், "மக்களே! நான் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக் கொள்ளுங் கள்! இதற்குப் பின்னால் இந்த இடத்தில் இனி எப்போதும் உங்களைச் சந்திப்பேன் என்ற நம்பிக்கை எனக்கில்லை. இன் றைய தினத்தையும், இந்த மாதத்தையும், இந்தத் தலத்தையும் எவ்வாறு புனிதமாக நீங்கள் கருதுகிறீர்களோ, அதேபோல் நீங் கள் உங்கள் இறைவனைச் சந்திக்கும் வரையிலும் உங்களுள் ஒவ்வொருவரின் உயிரும், உடைமையும், மானமும் மற்றவர்க ளுக்குப் புனிதமானவையாகும். நீங்கள் வெகு விரைவில் உங் கள் இறைவனைச் சந்திக்கவிருக்கிறீர்கள். அப்போது உங்கள் செயல்களைப் பற்றி அவன் கேள்வி கேட்பான்" என்று கூறி நிறுத்தி, "இந்தச் செய்தியை உங்களுக்கு நான் அறிவித்து விட் டேனல்லவா?" என்று கேட்டார்கள்.

மக்கள் யாவரும் ஒரே குரலில், "ஆம்! அறிவித்து விட்டீர் கள்" என்று கூறியதும், அண்ணலார் (ஸல்) அவர்கள், "இறைவா! இதற்கு நீயே சாட்சி" என்று கூறினார்கள்.

"தம்மிடம் அடைக்கலப் பொருளை வைத்திருப்பவர்கள் உரியவர்களிடம் திருப்பிக் கொடுத்து விடுவாராக. தவறி ழைக்கும் ஒருவன் தானே அதற்குப் பொறுப்பாளியாவான். மக னுடைய தவறுக்காகத் தகப்பனோ தகப்பனுடைய தவறுக்காக மகனோ விசாரிக்கப்பட மாட்டார்கள். அந்தோ மக்களே! நான் கூறுவதைக் கவனமாகக் கேளுங்கள்! ஒரு முஸ்லிம் அடுத்த முஸ்லிமின் உடன் பிறந்தவன் என்பதையும் முஸ்லிம்கள்

அனைவரும் ஒரே பிறப்பைச் சேர்ந்தவர்கள் என்பதையும் நீங்கள் மறந்து விட வேண்டாம்! தன் சகோதரன் அனுமதிக்காத எதுவும் ஒரு முஸ்லிமுக்கு உரிமையாகாது. எனவே நீங்கள் உங்களையே அநியாயத்துக்கு ஆளாக்கிக் கொள்ளாதீர்கள், இறைவா! நான் கூற வேண்டியதைக் கூறி விட்டேன் அல்லவா?

''மக்களே! அறியாமைக் காலத்தின் எல்லாச் செயல்களையும் என் இரு கால்களின் கீழ் வைத்து இன்று நான் மிதித்து விடுகிறேன். இருண்ட காலத்தின் கொலைகளுக்கான எல்லா இரத்தப் பழிகளையும் இன்று நான் விலக்கி விட்டேன். எல்லாவற்றுக்கும் முதலாக 'ஸஅத்' கூட்டத்தாரிடம் வளர்ந்து கொண்டிருந்தபோது, 'ஹுதைல்' என்பவரால் கொல்லப்பட்ட, என் குடும்பத்தைச் சேர்ந்த ரபீஆ இப்னு ஹாரிஃஸ் உடைய கொலைக்கான பழியை இன்று நான் மன்னித்து விட்டேன்.

''அறியாமைக் காலத்தில் கொடுக்கப்பட வேண்டிய வட்டி அனைத்தும் மண்ணிலே இன்று புதைக்கப்பட்டு விட்டது. இதற்கு ஆரம்பமாக என் குடும்பத்தைச் சேர்ந்த அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபுக்குச் சேர வேண்டிய வட்டி அனைத்தும் ரத்து செய்யப்பட்டு விட்டது. எவருக்கும் அநியாயம் செய்யப்பட மாட்டாது. கடன் கொடுத்தவர்கள் தங்களின் முதலைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அதில் நீங்கள் அநியாயஞ் செய்யாதீர்கள்.

''மக்களே! உங்களின் மனைவிகளைப் பற்றி அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள்! அவர்கள் அல்லாஹ்வின் அமானிதங்களாவர். அவர்களை நீங்கள் உங்களின் மனைவியர்களாக ஏற்றிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் அனுமதியோடு அவர்களின் உடல்களை உங்களுக்கு ஆகுமானதாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அவர்கள் மீது உங்களுக்குள்ள உரிமை நீங்கள் வெறுக்கும் எவரையும் உங்களின் படுக்கையில் வந்து விடாமல் பாதுகாத்துக் கொள்வதாகும். அதில் அவர்கள் தவறினால் கடுமையான

முறையில் அல்லாமல் அவர்களை நீங்கள் அடிக்க உரிமையுண்டு. உங்கள் மீது அவர்களுக்கான கடமை நீங்கள் அவர்களுக்கு நல்ல விதமாக உண்ணக் கொடுப்பதும் நல்ல விதமாக உடுத்தக் கொடுப்பதுமாகும்.

''மக்களே! கருப்பு நிறமுடைய அடிமை ஒருவரே உங்களுக்குத் தலைவராக ஆயினும் சரியே, அல்லாஹ்வின் வேதக் கட்டளைப்படி செயலாற்றுவாராயின் அவர் சொல்லுக்குக் கீழ்ப்படியுங்கள். மக்களே! ஒவ்வொருவருக்கும் உரியபங்கை அல்லாஹ் ஏற்கனவே ஒதுக்கி வைத்துள்ளான். எனவே வாரிசுதாரர்கள் சொத்தை அடைவதற்கு எந்தச் சாஸனமும் இடைஞ்சலாக இருத்தலாகாது. அப்படியல்லாவிடினும் மூன்றில் ஒரு பங்கு சொத்துதான் சாஸனம் மூலம் உரிமையாக்கப்பட வேண்டும். விபச்சாரம் செய்தவனுக்குத் தண்டனை அவனைக் கல்லெறிந்து கொல்வதேயாகும்.

''மக்களே! இந்தப் பூமியில் தான் தோல்வியுற்று விட்டதாக ஷைத்தான் பெரும் ஏமாற்றத்துக்கு ஆளாகியுள்ளான். மிக அற்ப விஷயங்களிலேனும் நீங்கள் அவனைப் பின்பற்றி விட மாட்டீர்களா என்று எதிர்பார்த்தவனாக இருக்கிறான். எனவே மார்க்கத்தில் அவனைப் பற்றி நீங்கள் எச்சரிக்கையுடனிருங்கள்.

''மக்களே! நீங்கள் பற்றிப் பிடித்துக் கொண்டால் அதன் பின் எப்போதுமே வழி தவறி விட மாட்டீர்களே — அத்தகைய இரு விஷயங்களை உங்களிடையே நான் விட்டுச் செல்கிறேன். அவை அல்லாஹ்வின் திருவேதமும், அவனுடைய ரஸூலின் முன் மாதிரியுமாகும்.

''மக்களே! இதோ ஜிப்ரஈல் என்னிடம் வந்து அல்லாஹ்விடமிருந்து ஸலாம் கூறி மாபெரும் வல்லமையுடைய இறைவன் அரஃபாவில் தங்கினவர்களின் பாவங்களை மன்னித்து விட்டதாகக் கூறுகிறார்.'' (அச்சமயம் ஹழ்லரத் உமர் (ரலி)

அவர்கள் எழுந்து 'அல்லாஹ்வின் தூதரவர்களே! இது நமக்கு மட்டுமா?' என்று கேட்டார்கள்) "இது உங்களுக்கும் உங்களைத் தொடர்ந்து மறுமை நாள் வரை வரும் அனைவருக்கும் கிடைத்த அருளாகும்.

"மக்களே! எனக்குப் பின்னர் எந்த ஒரு நபியும் வரப் போவதுமில்லை; எந்தப் புதிய சமுதாயமும் இனி பிறக்கப் போவதுமில்லை. நல்லபடி நான் கூறுவதைக் கேட்டுக் கொள்ளுங்கள்! உங்கள் இறைவனை வணங்குங்கள்! ஐவேளையும் தொழுகையை நிறைவேற்றுங்கள்! பொருள்களின் மீது ஜகாத்தை உளத் திருப்தியோடு கொடுத்து விடுங்கள். அல்லாஹ்வின் திரு வீட்டின் ஹஜ்ஜை நிறைவேற்றுங்கள்! உங்களின் உறவினர்களுக்கு உதவுங்கள்! இதற்குப் பலனாக நீங்கள் உங்களின் இறைவனின் சுவனத்தில் பிரவேசிப்பீர்கள்.

"மக்களே! இறுதி நாளில் உங்களிடம் என்னைப் பற்றியும் கேட்கப்படும். அப்போது நீங்கள் என்ன பதில் கூறுவீர்கள்? - இவ்வாறு பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டபோது கூடி நின்ற ஸஹாபாக்கள் அனைவரும், "யா ரஸூலல்லாஹ்! தாங்கள் இறைவனின் செய்தியை எங்களுக்கு எத்தி வைத்து விட்டீர்கள்; நபித்துவத்தின் கடமையை நிறைவேற்றினீர்கள்; நன்கு அறிவுறுத்தினீர்கள் என்று நாங்கள் சாட்சி கூறுவோம்" என்று கூறினார்கள்.

அப்போது நபி பெருமான் (ஸல்) அவர்கள், தங்களின் சுட்டு விரலை வானை நோக்கி உயர்த்தி பின்னர் அம்மக்கள் பக்கமாகக் காட்டி, "இறைவா! இவர்கள் சொல்லுக்கு நீயே சாட்சி!" என்று மூன்று முறை கூறினார்கள்.

அதன்பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள், "அருகில் இருப்பவர்கள் இச் செய்திகளைத் தொலைவிலிருப்பவர்களுக்கு எத்தி வைப்பார்களாக. இங்கே வந்திருப்பவர்கள் இச்

செய்திகளை இங்கே வராதிருந்து விட்டவர்களுக்கு எத்தி வைப்பார்களாக. ஒருக்கால் இதனைக் கேட்பவர்களை விட கேள்விப்படுபவர்கள் இதனை அதிகம் நினைவு வைப்பவர்களாகவும், நிறைவேற்றுபவர்களாகவும் இருக்கலாம்'' என்று கூறி, தங்களின் உரையை நிறைவுபடுத்தினார்கள்.

அரஃபாவின் வெளியில் அன்று பெருமானார் (ஸல்) அவர்கள் ஆற்றிய உரையே உலக முஸ்லிம் சமுதாயத்துக்கு அவர்கள் ஆற்றிய இறுதிப் பேருரை என்று கூறலாம். இறுதி நாள் வரை தோன்றவிருக்கும் தங்களின் ஆன்மீகச் சந்ததிகளுக்கு அவர்கள் பதிவுப் படுத்தி வைத்த சாஸனம் என்றும் கூறலாம்.

1. திருக்குர்ஆனையும், திரு நபியின் வழிமுறையையும் என்றும் பின்பற்றி நடந்து கொள்ள வேண்டுமென்ற ஆணை.

2. அவ்வாறு நடந்து கொள்ளும் வரையில் என்றுமே அவர்கள் வழி தவறி விடமாட்டார்கள் என்ற வாக்குறுதி.

3. முஸ்லிம்களின் உயிர், உடைமை, கண்ணியம் ஆகிய அமானிதங்கள் பேணப்பட வேண்டிய கடமை.

4. மனைவியர்களின் உரிமைகள் பேணப்பட வேண்டிய எச்சரிக்கை.

5. தங்களின் தகுதி பற்றியும் வாழ்நாள் முழுவதும் தாங்கள் ஆற்றிய பணிகள் பற்றியும் நம்முடைய முன்னோர்களின் சாட்சியம்.

6. தலைமுறைத் தலைமுறையாகப் பின்வளரும் சந்ததிகளுக்கு அவர்களின் தூதினை எத்தி வைக்க வேண்டிய பொறுப்பு.

— அத்தனையும் துல்லிதமாக அன்றைய தினம் அறிவித்து விட்டார்கள்.

அப்பேருரையை அவர்கள் நிகழ்த்தி முடித்த அதேநேரம்,

اَلْيَوْمَ اَكْمَلْتُ لَكُمْ دِيْنَكُمْ وَاَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِيْ وَرَضِيْتُ لَكُمُ الْاِسْلَامَ دِيْنًا

''நான் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை இன்றைய தினம் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தைத் தேர்ந்(தெடுத்)து (உங்களுக்கு) அருட் செய்து அங்கீகரித்துக் கொண்டேன்'' என்ற (5:03) திருவசனத் தொடர் இறங்கியது. 'வஹீ'யின் பளுவைத் தாங்க மாட்டாது நபி பெருமான் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த 'கஸ்வா' என்னும் ஒட்டகையானது தன் முன்னங் கால்களை வளைத்து தரையில் ஊன்றிக் கொண்டது.

அத்திருவசனத்தை இறைவனின் தூதர் (ஸல்) அவர்கள் ஓதிக் காட்டியதுமே ஸஹாபாக்களின் உள்ளங்கள் உவகையால் பொங்கி மகிழ்ந்தன. அதற்கு முன்னால் இறக்கப்பட்ட எந்த ஒரு வானக் கிரந்தத்திலும் இல்லாத ஒரு சிறப்பு தங்களுக்கருளப் பட்ட திருமறையிலே இடம் பெறுகிறது; எந்த ஒரு மார்க்கதுக் கும் அதுவரை கிடைக்காத - 'உங்களின் மார்க்கத்தைப் பரிபூரண மாக்கி விட்டேன்' என்ற நிறைவு பெற்ற முத்திரை, உலகங்க ளின் இரட்சகனான அல்லாஹ்வின் சந்நிதானத்தில் அருள் நிறைந்த அங்கீகாரம் இவற்றையெல்லாம் எண்ணி எண்ணி அவர்களின் நெஞ்சத் தடாகங்களிலே மகிழ்ச்சித் தாமரைகள் இதழ் விரிந்து மலர்ந்து கொண்டிருந்தன. இந்த பெரும் பேற்றுக் காகத்தானே அவர்கள் எத்தனைச் சோதனைகளைச் சுமந்தார்கள்; எத்தனைச் சுடு சொற்களைக் கேட்டார்கள்; எத்தனைக் கொடு மைகளை ஏற்றார்கள்; வீடுகளைத் துறந்து, உறவுகளை மறந்து உடைமைகளை இழந்து, பிறந்து, தவழ்ந்து, வளர்ந்து, வாழ்ந்த மண்ணையே பிரிந்து வெளியேறினார்கள். எல்லா வேதனைக ளையும் தாங்கி தங்களின் ஆசாபாசங்களையும் - ஆன்மாக்களை யும் அழித்துத் தேடிய கொடைச் செல்வமல்லவா அது!

## அழுகின்றதே இதயம்!

தியாகத் தீயிலே குளித்தெழுந்திருந்த திரு நபியின் ஸஹாபாக்கள் அப்போது தென்றலின் மந்தமாருதத்தை சுகிப் பதே போன்ற இன்பத்தில் ஒருவரையொருவர் கட்டித் தழுவி தங்களின் உணர்வுப் பெருக்குகளையும் வாழ்த்துக்களையும் பரி மாறிக் கொண்டிருந்த அதே வேளையில் ஒரேயொரு மனிதர் இந்தப் பல்லாயிரம் தோழர்களை மறந்து தனித்தவராக, தலை கவிழ்ந்து, சோர்வடைந்து நின்றிருந்தார். சோகத்தின் ரேகைகள் அவர் முகத்தில் பரவி நின்றன. சொட்டுச் சொட்டாய்க் கண்ணீ ரானது அவரின் கன்னங்களை நனைத்தேடியது. யார் அவர்?

ஆம்! ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள்தாம். இருபத்து இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் அதே மக்காவில், ஹிரா குகையில் ஜிப்ரஈலைச் சந்தித்து வெளிவந்த அப்துல்லாஹ்வின் அநாதை மகனார் 'வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர்த்து வேறில்லை; நான் அவனின் தூதன்' என்று கூறிய மாத்திரத்தில், ''பெருமானே! அதனை ஏற்றேன்; உங்களுக்காக, உங்கள் இறைவனுக்காக, உங்கள் தூதுக்காக, உங்களின் ஷரீஅத் துக்காக, என்னையும் என் உயிரையும் என் உடைமைகளையும் இதோ அர்ப்பணித்து விட்டேன்'' என்று முதல் முதலில் கூறி நின்ற அதே அபூபக்கர் (ரலி) அவர்கள், இஸ்லாத்தின் திரு நபி யின் இணை பிரியாத் தோழராக வாணாள் முழுவதையுமே கழித்த அதே அபூபக்கர் (ரலி) அவர்கள், 'என் தாயும், தந்தையும், மக்களும் உங்களுக்கு அர்ப்பணம்' என்று எந்நாளும் வாய் மணக்க, உளமினிக்கக் கூறி வந்த அதே அபூபக்கர் (ரலி) அவர் கள் அன்று உற்றாரை உவப்படையச் செய்து மாற்றாரை வியப்ப டையச் செய்யும் அத்தருணத்தில் கண்ணீர் வடித்து நின்றதேன்?

ஆம்! நுபுவ்வத்தின் இரகசியங்களைப் புரிந்து கொள்ளும் உளப் பக்குவம் பெற்றிருந்த ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் ''வஹீயின் சாராம்சத்தை அபூபக்கரின் நெஞ்சில் நான் பிழிந்து விடுகிறேன்'' என்ற திருநபியின் புகழ் மொழியைத் தாங்கி நின்ற மேதை அபூபக்கர் (ரலி) அவர்கள்,

''சமுதாயத்தின் வரலாற்றிலே வெற்றி கலந்த மகிழ்ச்சி தரும் 'சம்பூரணம்' பற்றிய அறிவிப்பானது வந்தபோது தாங்கள் மட்டும் கண்ணீர் வடிப்பதேன்?'' என்று நெருங்கிய சகாக்களால் வினவப்பட்டபோது மவுனத்தை விலக்கி வைத்து, ''மகிழ்ச்சிப் பெருக்கிலே மர்மமாக வரும் எச்சரிக்கையை நீங்கள் கவனிக்கத் தவறி விட்டீர்கள். மார்க்கத்தை நமக்கு எத்தி வைக்கவே நபி பெருமான் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். அந்த மார்க்கம் பரிபூரணமாக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது என்றால் அவர்கள் பிறந்த இலட்சியம் முடிவு பெற்றது என்பது பொருள். இனி அல்லாஹ்வின் அருமைத் தூதர் திரும்ப அழைக்கப்பட்டு விடுவார்கள் என்ற மர்மத்தை நீங்கள் விளங்கிக் கொள்ளவில்லையா?'' என்று வினவினார்கள்.

'ஸித்தீக்குல் அக்பர்' அவர்களின் அந்த விளக்கம் நாயகத் தோழர்களின் நெஞ்சங்களில் வேலாகப் பாய்ந்தது. மலர்ந்த வதனங்களெல்லாம் இப்போது வாடிச் சுருங்கின. ஹழ்லரத் அபூபக்கரை விட்டும் பிரிந்த அவர்கள் நபி பெருமான் (ஸல்) அவர்களை அண்மியவர்களாக, ''பெருமானே! அந்தோ அபூபக்கர் மார்க்கத்தின் சம்பூரணம் பற்றிய நன்மாராயத்தில் எங்கள் மாநபியின் மரணத்தின் வாடையை அல்லவோ நுகர்கிறார்'' என்று முறையிட்டவர்களாக, ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் கையறு நிலையைக் கூறினர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோ, ''அவருடைய கணிப்பு சரியானதே. அபூபக்கர் உங்களிடம் உண்மையையே கூறினார்'' என்றார்கள்.

மாலைக் கதிரவனின் மஞ்சள் கதிர்கள் அரஃபாவின் வெளியைப் பொன்னிறமாக்கியபோது, உஸாமா (ரலி) அவர்கள் பின்னிருக்க ஒட்டகையின் மீது அமர்ந்திருந்த பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் இரு கரங்களையும் வானத்தளவில் உயர்த்தி வெகு நேரம் உள்ளமுருகப் பிரார்த்தித்தார்கள். கை நழுவி கீழே சரிந்த ஒட்டகையின் கயிற்றைக் குனிந்து ஒரு கையினால் பிடிக்கையிலும் அவர்களின் மற்றொரு கையானது வானத்தின் பக்கல் ஏந்திய வண்ணமே இருந்தது.

## அண்ணலாரின் ஆனந்தம்

அந்திச் சாய்ந்தபோது நபி பெருமான் (ஸல்) அவர்கள் தல்பியா கூறிய வண்ணமே தங்களின் ஒட்டகையை முஸ்தலிபாவை நோக்கிச் செலுத்தினார்கள். ஒட்டகையானது அடிமேல் அடி எடுத்து வைத்துச் சென்று கொண்டிருந்தது. நெரிசல் குறைந்த இடங்களில் மட்டும் அது சற்று வேகத்துடன் நடந்தது. ஒரு சிலர் தங்களின் ஒட்டகையை அடித்து வேகமாகச் செலுத்த முற்படுவதைக் கண்டபோதும் அவர்கள், ''மக்களே! நிதானத்தைக் கடைபிடியுங்கள். அமைதியும் நிதானமும் உத்தமமான குணங்களாகும். அவசரத்தால் எவ்வித நன்மையும் ஏற்படாது'' என்று கூறி அவ்வாறு அடிக்காமல் தடுத்தார்கள். இறுதியாக அவர்கள் 'மஷ்அருல் ஹறாம்' என்ற தலத்தை அடைந்தபோது நன்கு இருட்டி விட்டது. அங்கு, 'மக்ரிப்', 'இஷா' ஆகிய இரு தொழுகைகளையும் ஒரே பாங்கொலியையும் இரண்டு இகாமத்துகளையும் கொண்டு இடையில் எவ்வித நபிலான தொழுகையுமில்லாமல் தனித்தனியாக தொழுதார்கள். அதன் பின் அந்த இரவைப் புனித இரவாக்கிய பெருமானார் (ஸல்) அவர்கள், இரவெல்லாம் இறை வணக்கத்திலேயே ஆழ்ந்திருந்தார்கள்.

விடிவதற்குச் சற்று முன்னதாகவே காலை நேரத் தொழுகையைத் தொழுது முடித்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் அதன் பின்னரும் சற்று நேரம் பிரார்த்தித்த வண்ணமே இருந்தார்கள்.

பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் 'கலகல'வெனத் தங்களின் கடைவாய்ப் பற்கள் வெளித் தெரியும்படி சிரித்தார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் வாழ்நாளிலேயே அடுத்தவர்களுக்குக் கேட்கும்படியாகச் சிரிப்பதை அன்றே முதன் முதலாகக் கண்ட தோழர்கள் வியப்படைந்தார்கள். பிரார்த்தனையை முடித்து எழுந்த பெருமானார் (ஸல்) அவர்களை நோக்கி ஸஹாபாக்கள், 'பெருமானே! என்றுமே இல்லாத வழக்கமாக இன்று தாங்கள் உரத்துச் சிரித்த காரணம் எங்களுக்குத் தெரியவில்லையே' என்று கேட்ட போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்தவர்களாக, ''அரஃபாவின் வெளியில் அல்லாஹ்விடத்தில் 'என் இறைவா! உன் அருளை நாடி இந்த நாளில் இத்தலத்தில் வந்து தங்கும் என் உம்மத்துகளின் எல்லாப் பாவங்களையும் மன்னித்தருள்' என்று பிரார்த்தித்தேன். 'அவ்வாறே மன்னித்தேன். ஆனால், தன் சகோதரன் ஒருவனுக்குச் செய்த அநீதியை மட்டும் நான் மன்னிக்க மாட்டேன்' என்று என் இறைவனிடமிருந்து பதில் கிடைத்தது. என் உள்ளம் திருப்தியடையவில்லை. முஸ்தலிபாவில் வந்த பின்னால் இஷாவைத் தொழுது முடித்து இரவெல்லாம் நான் என் இறைவனிடம், ''என் இரட்சகா! நீ நாடினாயானால் அநீதி செய்யப்பட்டவனுக்கும் உன் புறத்திருந்து பலமடங்கு அதிகமான நன்மைகளைப் பிரதியாகச் செய்து விடக் கூடியவன். அவ்வாறு செய்தேனும் என் உம்மத்துகளின் எல்லாப் பாவங்களையும் மன்னித்தருள்' என்று கேட்டு நின்றேன். எனக்கு எந்தவிதமான பதிலும் கிடைக்காமல் என் நெஞ்சம் அமைதியை இழந்தது. காலைத் தொழுகையைத் தொழுத பின்னரும் நான் என் கைகளை ஏந்தி இதே பிரார்த்தனையைக் கேட்டேன். அப்போது ஜிப்ரயீல்(அலை) என்னிடம் வந்து 'யா ரஸூ

லுல்லாஹ்! தாங்கள் தங்கள் உம்மத்துக்களுக்காகப் பெரிதும் சிரமப்பட்டு விட்டீர்கள். அல்லாஹ் தங்களின் இவ்வேண்டு கோளை அங்கீகரித்தான்' என்று கூறிச் சென்றார்கள். ஹழ்லரத் ஜிப்ரஈல் (அலை) அவர்கள் இவ்விஷயத்தை என்னிடம் கூறி யதை சற்றுத் தொலைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த ஷைத் தான், தன் தலையில் மண்ணை வாரி இறைத்துக் கொண்டு அதோ ஓடுகிறான். அவன் தன் தலையில் தன் கையாலேயே மண்ணை வாரி இறைத்துக் கொண்டதைக் கண்டபோது என் னால் சிரிப்பை உள்ளடக்க முடியவில்லை'' என்றருளி மகிழ்ந் தார்கள்.

நெரிசலைத் தவிர்ப்பதற்காக பெண்களையும் இளைஞர்க ளையும் முன்னதாகவே மினாவுக்கு அனுப்பி வைத்த நபி பெரு மான் (ஸல்) அவர்கள் இளைஞர்களை நோக்கி, ''அன்புக்குரிய வர்களே! சூரியன் உதிப்பதற்கு முன்பாகவே, 'அல் அகபா'வில் கல்லெறிந்து விடாதீர்கள்'' என்று எச்சரித்தார்கள். காலைத் தொழுகையை முடித்த பின்னர் 'கஜ்' என்ற மலை மீது ஏறி நின்று நபி பெருமான் (ஸல்) அவர்கள், அதுவும் அதனைச் சுற்றியுள்ள முஸ்தலிபாவின் எல்லாப் பகுதிகளும் ஹஜ்ஜாஜிகளின் தங்குமி டமாகும் என்று அறிவித்தார்கள். காலைக் கதிரவன் தோன்றுவ தற்கு முன்னதாகவே பழ்ல் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களு டன் தங்கள் ஒட்டகையின் மீது ஏறி, தொடர்ந்து தல்பியாவைக் கூறியவர்களாக 'மினா'வை நோக்கிப் புறப்பட்ட பெருமானார் (ஸல்) அவர்கள், ''முஹஸ்ஸிர் என்னும் பள்ளத்தாக்கைத் தவிர்த்து முஸ்தலிபாவின் எல்லாப் பாகமும் ஹஜ்ஜாஜிகளுக் குப் புனிதம் நிறைந்ததாகும்'' என்று அறிவித்தார்கள். அப்ரஹா வின் யானைப் படைகள் நிர்மூலமாக்கப்பட்ட பள்ளத்தாக்கை வேகமாகக் கடந்த பெருமானார் (ஸல்) அவர்கள் மினாவை நோக்கிச் சென்றார்கள். அப்போது வானத்தினின்றும் பலத்த மழையானது பொழிந்து கொண்டிருந்தது. ஆனாலும் பெருமா னார் (ஸல்) அவர்கள் தல்பியாவை உரத்துக் கூறியவர்களாக

மினாவை வந்தடைந்தார்கள். வழியில் 'ஜும்ரத்துல் உக்பா' என்ற ஷைத்தானின் அடையாளமிடப்பட்ட இடத்தின் மீது லுஹாவுடைய நேரத்தில் ஒன்றன் பின் ஒன்றாக ஏழு கற்களை வீசினார்கள். ''ஹஜ்ஜின் எல்லாக் கிரியைகளையும் என்னிடமிருந்து தெரிந்து கொள்ளுங்கள். மற்றொரு முறை நான் ஹஜ்ஜு செய்ய முடியுமா என்று நான் அறிய மாட்டேன்'' என்று அப்போதும் மக்களுக்கு அறிவுறுத்தினார்கள்.

அதன்பின் தங்களின் கூடாரத்திற்குத் திரும்பிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தாங்கள் கொணர்ந்த ஒட்டகைகளை ஒன்றன் பின் ஒன்றாக இறைவன் பெயரால் அறுத்துப் பலியிட்டார்கள். அறுபத்து இரண்டு ஒட்டகைகளைத் தங்கள் திருக்கரத்தாலேயே அறுத்துப் பலியிட்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் அறுபத்து மூன்றாம் ஒட்டகையை அறுத்தபோது அவர்கள் கரங்கள் கடுமையாக ஓய்ந்து விட்டன. களைத்து நின்ற திருநபியவர்கள் எஞ்சிய முப்பத்து ஏழு ஒட்டகைகளையும் தங்களின் அருமை மருகர் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களைக் கொண்டு அறுக்கச் செய்தார்கள். பின்னர் மக்களை நோக்கி, ''மினாவின் எல்லாப் பாகங்களும் பலியிடப்படும் தலமாகும்'' என்று அறிவித்தார்கள்.

அறுபத்து மூன்றாம் ஒட்டகையோடு அவர்களின் திருக்கரங்கள் ஓய்ந்து அடுத்து அறுக்க இயலாமல் போனது அவர்களின் வாழ்க்கைப் பாதையில் அறுபத்து மூன்றாம் மைல் கல்லுக்கு அப்பால் வழியில்லை என்பதற்கு ஒரு முன்னறிவிப்புப் போல் அமைந்து விட்டது.

பின்னர், தங்களின் தலையை மழித்துக் கொண்டவர்களாக, 'இதுவே உங்களுக்கு நான் வாக்களித்த ஒன்று' என்று கூறி 'ஹுதைபியா'வுக்கு முன் தாங்கள் கண்ட கனவை நினைவுபடுத்

தினார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களைப் பின்பற்றிய ஸஹாபாக்களும் தங்களின் தலைகளை மழித்துக் கொண்டனர். அவர்களில் சிலர் தலைமுடிகளைக் கத்தரித்தும் கொண்டனர். தலையை மழித்துக் கொண்ட திரு நபியின் திருமுடிகளை அன்னை உம்மு ஸலமா .(ரலி) அவர்களும் ஹழ்லரத் அபூ தல்ஹா (ரலி) அவர்களும் ஸஹாபாக்களுக்குப் பகிர்ந்தளித்து விட்டனர். அதன் பின்னர் தங்கள் இரு கரங்களையும் ஏந்தி நின்ற பெருமானார் (ஸல்) அவர்கள் வானை நோக்கி, ''இறைவா! தலையை மழித்துக் கொண்டவர்களின் பிழை பொறுத்து, அவர்கள் மீது நீ உன் பேரருளைச் சொரிந்தருள்'' என இறைஞ்சினார்கள். தங்களின் முடிகளைக் கத்தரித்துக் கொண்டவர்களுக்கு இவ் விறைஞ்சுதல் சற்று ஏமாற்றத்தைத் தந்தது. அவர்கள் தங்களின் திருநபியை அணுகி, 'நாயகமே! தலை முடியைக் கத்தரித்துக் கொண்டவர்களுக்கும் இறைஞ்சுங்கள்' என்று வேண்டினர். நபி பெருமான் (ஸல்) அவர்கள் மீண்டும், ''இறைவா! தலையை மழித்துக் கொண்டவர்களின் பிழை பொறுத்து அவர்கள் மீது நீ உன் பேரருளைச் சொரிந்தருள்' என்று இறைஞ்சினார்கள். தலை முடியைக் கத்தரித்துக் கொண்ட ஸஹாபாக்கள் மறுமுறையும் முன் கண்டவாறே வேண்டி நின்றனர். மூன்றாம் முறையும் நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''இறைவா! தலையை மழித்துக் கொண்டவர்களின் பிழை பொறுத்து அவர்கள் மீது உன் பேரருளைச் சொரிந்தருள்' என்றே இறைஞ்சினார்கள். தலை முடியைக் கத்தரித்துக் கொண்ட தோழர்கள் மூன்றாம் முறையும் முன் கண்டவாறே வேண்டியபோது, ''தலைமுடியைக் கத்தரித்துக் கொண்டவர்கள் மீதும்'' என்று மட்டும் கூறிக் கொண்டார்கள். அதன்பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள் தாங்கள் பலியிட்ட ஒவ்வோர் ஒட்டகையிலிருந்தும் ஒவ்வொரு துண்டு இறைச்சியை வெட்டி எடுத்து அவற்றை ஒரு பாத்திரத்திலிட்டு சமைக்கச் செய்து தங்களோடு அவ்வர்ப்பணத்தில் பங்காளியாகிக்

கொண்ட ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களோடு சேர்ந்து தாங்கள் எடுத்துக் கொண்டார்கள். மீதமிருந்த இறைச்சிகளையும் தோல் களையும் பிராணிகளின் மீது போர்த்தப்பட்டிருந்த விரிப்புகளை யும் நபி பெருமான் (ஸல்) அவர்களின் உத்தரவின் பேரில் ஹழ் லரத் அலீ (ரலி) அவர்கள் அங்குக் கூடி நின்றவர்களுக்குப் பகிர்ந் தளித்து விட்டனர்.

பின்னர் நபி பெருமான் (ஸல்) அவர்கள் தர்மம் செய்யத் துவங்கிய போது ஏழைகளேயன்றி நல்ல நிலைமையில் உள்ள வர்களும் அவர்களிடம் பரக்கத்திற்காகக் கையேந்திப் பெற்ற னர். அவர்களில் திடகாத்திரமாகவும் வாலிப முடுக்கோடும் ஒரு சிலரைக் கண்டபோது நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''நீங்கள் என்னிடம் கேட்பதால் நான் உங்களுக்கும் சிறிதளவு தருவேன். ஆனால் இயலாதவர்கள் இதில் பங்கடைய முடியாமல் ஆகிவி டுமே'' என்று அருள்மொழி பகர்ந்தார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஏவிய பணிகளை முடித்து ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் திரும்பியபோது மக்களை இஹ்ராமைக் களைந்து விடுமாறும், உணவுண்ணவும், தங்களிறைவனின் அருட்கொ டைகளுக்கு நன்றி செலுத்துமாறும் கூறும்படி பணித்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் மினாவில் மூன்று நாட்கள் தங்கி இருந்தார்கள். அவற்றில் ஒரு நாள் அவர்கள் மக்கா சென்று புனிதக் கஅபாவை ஏழு முறை இடம் சுற்றி மீண்டும் மினா திரும்பி மதியத் தொழுகையைத் தொழுதார்கள். மக்கள் வீடு திரும்ப ஆயத்தம் செய்வதைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள், 'கஅபாவை இடம் சுற்றாமல் எவரும் வீடு திரும்பி விட வேண்டாம்! அது ஹஜ்ஜின் இறுதிக் கிரியையாகும்'' என்று எச்சரித்தார்கள்.

அம்மூன்று நாட்களிலும் தினமும் தவறாமல் சென்று கல் லெறியும் கிரியையைச் செய்து வந்தார்கள். ஹஜ்ஜுக்காகத்

திரண்ட மக்கள் பலரும் நபிமணி (ஸல்) அவர்களிடம் வந்து ஹஜ்ஜு சம்பந்தமான எத்தனையோ ஐயங்களைக் கூறி விளக்கம் தெரிந்து கொண்டிருந்தார்கள்.

சிறப்பான ஒரு முடிவைத் தங்களின் வாழ்வு நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்திருந்த பெருமானார் (ஸல்) அவர்களும், மக்கள் பிரிந்து செல்வதற்கு முன் அவர்களுக்குத் தேவையான எல்லா விபரங்களையும் மகத்தான அந்தச் சந்திப்பின் போது அவர்கள் தெரிந்து கொள்வதை விரும்பினார்கள்.

அவர்களில் ஒருவர், "நபியே! அறியாமையின் காரணமாக பலியிடுவதற்கு முன்பாகவே நான் என் தலையை மழித்துக் கொண்டேனே" என்று வருந்தியபோது, நபி பெருமான் (ஸல்) அவர்கள் "கவலையில்லை, இப்போது பலியிட்டு விடும்" என்றார்கள். மற்றொருவர் "அறியாமையின் காரணமாக கல்லெறிவதற்கு முன்னதாகவே நான் பலி கொடுத்து விட்டேன்!" என்று கவலையுற்றபோது, "கவலையுற வேண்டாம் இப்போது கல்லெறிந்து விடும்!" என்று கட்டளையிட்டார்கள். அடுத்து ஒருவர், "நான் என் தலையை மழித்துக் கொள்ளுமுன்னரே மக்காவில் நுழைந்து விட்டேன்" என்று குறைபட்டபோது, "இப்போது மழித்துக் கொள்வீராக! தவறொன்றுமில்லை" என்று கூறினார்கள். இத்தகைய கேள்விகளுக்கெல்லாம் நபி பெருமான் (ஸல்) அவர்கள் பதில் கொடுத்துக் கொண்டிருந்தபோது ஒருவர் வந்து, "பெருமானே! கஅபாவை இடம் சுற்று முன்பாகவே நான் ஸஃபாவுக்கும் மர்வாவுக்கும் இடையில் ஓடி விட்டேனே" என்று கவலையுற்றார். "அதனால் ஒன்றும் குற்றமில்லை" என்றுரைத்த பெருமானார் (ஸல்) அவர்கள், "ஆனால் ஒரு முஸ்லிமின் கண்ணியத்திற்குப் பங்கம் விளைவிப்பது நிச்சயமாகக் குற்றமே. எவர் அவ்வாறு செய்தாரோ அவர் ஒரு பாவத்தையே செய்தார்" என்று கூறினார்கள்.

அப்போது ஓர் இளம் பெண் அவர்களிடம் வந்து, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! முதிய வயதை அடைந்த என் தந்தையார் அவர் மீது கடமையாக உள்ள ஹஜ்ஜை நிறைவேற்ற இயலாதவராக இருக்கிறார். அவருக்காக நான் ஹஜ்ஜு செய்யலாமா?'' என்று கேட்டதற்கு நபி பெருமான் (ஸல்) அவர்கள் செய்யலாமெனப் பதில் கூறினார்கள். அப்போது பேரெழில் வாய்ந்த அப்பெண்ணின் மதி வதனத்தின் மீது நபி பெருமான் (ஸல்) அவர்களின் அருகில் நின்றிருந்த பழ்ல் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் பார்வை பட்டது. அப்பெண்ணின் பார்வையும் இளம் வயதுடைய பழ்ல் அவர்களின் மீது விழுந்தது. அதனைக் கண்ட நபிபிரான் (ஸல்) அவர்கள் பழ்ல் அவர்களின் சிரசைத் தங்கள் கரத்தால் பிடித்து மறுபக்கமாகத் திருப்பினார்கள். ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் அவ்வாறு செய்ததற்கான காரணத்தைக் கேட்ட பொழுது அண்ணலார், ''இளம் வயதுடைய ஓர் ஆணும் பெண்ணும் சந்திப்பதைக் காணும்போது ஷைத்தான் அவர்கள் மீது ஆதிக்கம் கொண்டு விடுவானோ என நான் அஞ்சுகிறேன்'' என்று பதிலளித்தார்கள்.

அதன் பின்னர், மற்றொருவர் அவர்களை நெருங்கி, ''பெருமானே! என் சகோதரி ஹஜ்ஜு செய்வதற்காக எண்ணங் கொண்டு ஹஜ்ஜு செய்யாமலே இறந்து விட்டார். அவருக்காக நான் ஹஜ்ஜு செய்யலாமா?'' என்று கேட்டார். திருத் தூதர் (ஸல்) அவர்கள், ''உம் சகோதரி பட்ட கடனை நீர் தீர்ப்பீரல்லவா?'' என்று திருப்பிக் கேட்கவே அவர் 'ஆம்' என்றார். உடனே நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''அப்படியானால் உம் சகோதரி அல்லாஹ்வுக்குப் பட்ட கடனையும் தீர்ப்பீராக! ஏனெனில் கடன் தீர்க்கப்பட வேண்டியதற்கு மற்றவர்களை விட அவனே அதிகப் பொருத்தமானவன்'' என்று கூறினார்கள்.

ஒருவர் தம் சகோதரருக்காக தாம் ஹஜ்ஜு செய்ய வந்ததா கக் கூறியபோது, 'நீர் உமக்காக ஹஜ்ஜு செய்து விட்டீரா?'' என வினவினார்கள். அவர், 'இல்லை' என்று பதிலளித்தபோது ''முதலில் நீர் உமக்காக ஹஜ்ஜு செய்யும். அதன் பின்னர் உம் சகோதரருக்காகவோ, மற்ற உறவினருக்காகவோ ஹஜ்ஜு செய் யலாம்'' என்று விளக்கினார்கள்.

ஒருநாள் மதியத் தொழுகைக்குப் பின்னால் இறைவனின் திருத் தூதரவர்கள் செந்நிறப் போர்வை ஒன்றை யணிந்தவர்க ளாக, 'கஸ்வா'வின் மீது அமர்ந்து வந்தபோது அவர்களுக்கே சொந்தமான நபித்துவத்தின் பரிவட்டப் பிரகாசத்தால் ஒளி வீசிய அவர்களின் ஆன்மீகப் பேரழகைக் கண்டு மகிழ்ந்தவர்க ளாக, ஸஹாபாக்களின் ஒரு மாபெருங் கூட்டம் அவர்களைச் சூழ்ந்து நின்றது. அவர்களின் மகிழ்ச்சியையும் ஆரவாரத்தையும் மனங்குளிர கண்ட மாநபி (ஸல்) அவர்கள் தங்களின் மதுரக் குரலால் அவர்களின் ஆன்மாக்களுக்கு விருந்தளித்தார்கள். ஹழ் லரத் அலீ (ரலி) அவர்களும், ஹழ்லரத் ராபிஆ இப்னு உமையா (ரலி) அவர்களும் தங்களின் உரத்த குரல்களால் நபிமணி (ஸல்) அவர்களின் சொல்லை ஒவ்வொரு வாக்கியமாகத் திருப்பி கூறிக் கொண்டிருந்தனர். நின்றவாறும், அமர்ந்தவாறும் காத்திருந்த பெருங் கூட்டத்திற்குப் பிரிந்து செல்ல விடை தருவது போல் பேசிய நபி பெருமானார் (ஸல்) அவர்கள், வழக்கம் போல் முதலில் இறைவனைப் புகழ்ந்து துதித்து பின்னர், ''மக்களே! என் சொற்களை செவி கொடுத்துக் கேட்டுக் கொள்ளுங்கள்! ஏனெனில், இந்த ஆண்டுக்குப் பின் இனி எப்போதும் இந்த இடத்தில் என்னை நீங்கள் சந்திக்கப் போவதில்லை'' என்று கூறி, தங்களின் குரலை உயர்த்திவயர்களாக, ''இது என்ன மாதம் என்று நீங்கள் அறிவீர்களா?'' என்று கேட்டார்கள். ''அல்லாஹ்

வும், அவனின் ரஸூலுமே மிகவும் அறிந்தவர்கள்'' என்று மக்கள் பதிலளித்தார்கள்.

''இது ஹஜ்ஜுடைய மாதமல்லவோ?'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

''ஆம்'' என்று பதில் வந்தது.

''இது என்ன நாள் என்று நீங்கள் அறிவீர்களா?'' என்று அண்ணலார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

''அல்லாஹ்வும், அவனுடைய ரஸூலுமே மிக அறிந்தவர்கள்'' என்று மக்கள் பதில் தந்தனர்.

''இது தியாகத் திருநாள் அல்லவோ?'' என்று நாயகமவர்கள் கேட்டதற்கு, ''ஆம்'' என்று பதில் தந்தார்கள் மக்கள்.

''இது என்ன நகரம்?'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

''அல்லாஹ்வும், அவனின் ரஸூலுமே மிக அறிந்தவர்கள்'' என்று விடையிறுத்தனர் மக்கள்.

''இது புனித நகரமல்லவா?'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டவுடன் மக்கள், ''ஆம்'' என்றனர்.

சிறிது நேரம் மவுனத்திற்குப் பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''உங்களின் இந்த மாதமும், இந்த நாளும், இந்த நகரமும், உங்களுக்குப் புனிதமாக இருப்பது போல் உங்கள் ஒவ்வொருவருடைய உயிரையும், உடைமைகளையும், மானத்தையும் ஒவ்வொருவரும் புனிதமாகக் கருதுங்கள்! உங்கள் இறைவனை நீங்கள் சந்திக்கும் அந்த நாள் வெகு சமீபத்தில் இருக்கிறது என்பதை நல்லபடி நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்!

''உங்களின் அடிமைகளை நன்கு கவனியுங்கள்! நீங்கள் உண்ணும் உணவையே அவர்களுக்கும் உண்ணக் கொடுங்கள்! நீங்கள் உடுத்துவது போன்ற உடையையே அவர்களுக்கும் உடுத்தக் கொடுங்கள்! அவர்களின் குற்றங்களைத் தாராளமாக மன்னியுங்கள்! அவர்களைத் தண்டிக்காது விட்டு விடுங்கள்! வெகு விரைவில் உங்கள் இறைவனை நீங்கள் சந்திக்கும் போது உங்கள் செயல்களைப் பற்றி நீங்கள் வினவப்படுவீர்கள். ஜாக்கிரதை! எனக்குப் பின்னர் நீங்கள் வழி தவறி விடாதீர்கள். நீங்களே ஒருவர் கழுத்தை ஒருவர் அறுத்துக் கொள்ளாதீர்கள்!

''மக்களே! தஜ்ஜாலைப் பற்றி தங்களின் சமுதாயத்தவர்களை எச்சரிக்காத எந்த நபியையும் அல்லாஹ் அனுப்பி வைக்கவில்லை. நூஹ் நபியும் அவர்களுக்குப் பின்னர் வந்த நபிமார்களும் தத்தம் கூட்டத்ினரை எச்சரித்தேயுள்ளனர்; மக்களுக்கிடையில் அவன் தோன்றுவான் என்பதை தெரிவித்துள்ளார்கள். அவனுடைய நிலைமையில் நீங்கள் ஒன்றும் அறியாதபடி மறைந்து கிடக்கலாம். ஆனால் அல்லாஹ்விடம் எதனையும் மறைக்க முடியாது. ஏனெனில் அல்லாஹ் தஜ்ஜாலைப் போல் ஒற்றைக் கண் உடையவன் அல்லன். தஜ்ஜாலின் ஒரு கண் அழுகிய திராட்சையைப் போல் பழுதுபட்டிருக்கும்.

''மக்களே! நிச்சயமாக உங்கள் இறைவன் ஒருவன். உங்கள் தந்தை ஆதமும் ஒருவரே. நீங்கள் யாவரும் அவருடைய மக்களே. அவரோ மண்ணால் படைக்கப்பட்டவர். எந்த ஓர் அரபியும், அரபியல்லாத அஜமியை விடவோ அல்லது அஜமி அரபியை விடவோ எவ்வகையிலும் உயர்ந்தவரல்லவர். அதுபோலவே சிவந்த நிறமுடையவர் கருத்த நிறமுடையவரை விடவோ, கருத்த நிறமுடையவர் சிவந்த நிறமுடையவரை விடவோ உயர்ந்தவரல்லர். நிச்சயமாக, அல்லாஹ்வின் சந்நிதானத்தில் 'தக்வா' என்னும் இறையச்சமுடையவரே உயர்ந்தவர்

என்பதை நினைவில் வையுங்கள்! இதற்குப் பின் இந்த இடத்தில் உங்களை மீண்டும் சந்திப்பேன் என்று நான் எதிர்பார்க்க வில்லை. அருகிலிருப்போர் இச்செய்திகளைத் தொலைவிலி ருப்போருக்கு எட்டச் செய்யுங்கள். இங்கு வந்திருப்பவர்கள் இங்கு வராமல் இருந்து விட்டவர்களுக்கு இச்செய்திகளை எத்தி வையுங்கள். ஏனெனில் நேரில் கேட்பவர்களை விட கேள்விப்ப டுபவர்கள் ஒருக்கால் அதிக கவனம் செலுத்துபவர்களாக இருக் கலாம்.

''மக்களே! உங்களுக்குத் தெரிவிக்க வேண்டிய செய்தி களை நான் தெரிவித்து விட்டேனா?'' என்று கேட்டு நபி பெரு மான் (ஸல்) அவர்கள் நிறுத்தியபோது, ''அல்லாஹ்வின் திருத் தூதர் அவர்களே! தாங்கள் தெரிவித்து விட்டீர்கள்'' என்று உரத்து பதில் கூறினார்கள் மக்கள்.

மீண்டும் நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''உங்களுக்குண் டான என்னுடைய கடமையை நான் பரிபூரணமாகச் செய்து முடித்து விட்டேனா?'' என்று கேட்டபோது, ''அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! நீங்கள் பரிபூரணமாகச் செய்து முடித்தீர் கள்'' என்று மக்கள் பதில் கூறினார்கள்.

இந்த பதிலைக் கேட்டுப் பூரிப்படைந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் வானத்தை நோக்கியவர்களாக, அம்மக்களைச் சுட்டிக்காட்டி, ''இறைவா! இவர்களுக்கு நீயே சாட்சி'' என்று மும்முறை கூறினார்கள்.

மூன்று நாட்களுக்குப் பின்னர் நபி பெருமான் (ஸல்) அவர் கள் மினாவிலிருந்து மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள். அர ஃபாவில் இறங்கிய திரு வசனத்தின் உட்பொருளை விளங்கியி ருந்த மக்களின் கண்களுக்கு மினாவை விட்டும் மக்காவுக்கு அவர்கள் புறப்பட்ட காட்சி உண்மையில் அழியும் இந்த அநித்

திய உலகை விட்டும் அழிவில்லா மறுவுலகை நோக்கிப் புறப்ப டுவதைப் போல் தோன்றியது. மக்கா வந்தடைந்த பெருமானார் (ஸல்) அவர்கள் அருள் பெற்ற ஜம்ஜமின் அமுத நீரைக் கொண்டு வரச் செய்து அருந்தினார்கள். அதன் பின் தங்கள் காலணிகளைக் கழற்றி விட்டு உஸாமா (ரலி), பிலால் (ரலி), உதுமான் இப்னு தல்ஹா (ரலி) ஆகிய தோழர்களோடு கஅபா வின் உள்ளே சென்று தொழுதார்கள். ஆனால், அதனை விட்டும் வெளிவந்த பின்னர் அப்படிச் செய்து விட்டதற்காக அவர்கள் வருந்தினார்கள். ஏனெனில் புனிதத் திருவீட்டை வலம் சுற்றவே அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டிருந்ததேயன்றி கஅபாவின் உட்சென்று தொழும்படியாகக் கட்டளையிடப்படவில்லை. அன்றியும் அணுவும் பிசகாமல் அவர்களின் அடியொற்றி நடக் கக் கூடிய பிற்கால மக்கள் கஅபாவின் உள்ளே சென்று தொழக் கூடிய வாய்ப்பை அடையாவிடின் ஹஜ்ஜே பரிபூரணமாக நிறை வேற்றப்படவில்லை என்ற முடிவுக்கு வந்து விடலாமல்லவா?

பின்னர் கஅபாவை விட்டும் வெளிவந்து இரண்டு ரக்க அத்துகளைத் தொழுது கொண்ட இறைதூதர் (ஸல்) அவர்கள் தங்களின் மனைவிமார்களை நோக்கி, "இதுவே உங்களுடைய ஹஜ்ஜாகும். இனி நீங்கள் உங்களுடைய வீடுகளில் தங்கியிருங் கள்!" எனக் கட்டளையிட்டார்கள்.

அப்போது மாதவிடாயை விட்டும் பரிசுத்தமாகி விட்டி ருந்த தங்களின் மனைவியார் ஆயிஷா (ரலி) அவர்களை அவர்க ளின் சகோதரர் ஹழ்ரத் அப்துர் ரஹ்மான் இப்னு அபூபக்கர் (ரலி) அவர்களுடன் மக்காவில் இருந்து மூன்று கல் தொலை வில் உள்ள 'தன்ஈம்' என்ற இடம் சென்று இஹ்ராம் அணிந்து வரச் செய்து, 'கஅபா'வை இடம் சுற்றச் செய்து உம்ராவை நிறைவேற்றி வைத்தார்கள். 'கஅபா'வின் உள்ளே சென்று தொழ ஆசைப்பட்ட ஆயிஷா (ரலி) அவர்களை கஅபாவைச் சூழ

உள்ள 'ஹத்தீம்' என்ற தலத்தில் தொழச் செய்து அதுவும் கஅபா வின் பகுதியே என்று கூறினார்கள்.

## தோழருக்கு ஒரு தீர்க்கதரிசனம்

அதன் பின் தங்களோடு ஹஜ்ஜு செய்ய வந்து திடீரென நோயுற்று விட்ட தங்களின் அருமைத் தோழர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களைக் காணச் சென்றார்கள். அல்லாஹ் வின் அருமைத் தூதரை கண்ட ஹழ்லரத் ஸஅத் இப்னு ஆபீ வக்காஸ் (ரலி) அவர்கள், ''இறைவனின் இனிய தூதர் அவர் களே! மரணமானது என்னை நெருங்கி வரக் காண்கிறேன். எனக்கு ஒரேயொரு பெண் மகள் உண்டு. ஆனால் அதிகமான உடைமைகளைப் பெற்றுள்ள நான் அவற்றில் மூன்றில் இரு பாகத்தை மரிப்பதற்கு முன்பாகவே தர்மம் செய்துவிட நாடுகி றேன்'' என்று கூறினார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள், ''அப்படிச் செய்ய வேண் டாம்!'' என்றார்கள். ''அப்படியானால் அவற்றில் பாதியைத் தர்மம் செய்து விடவா?'' என்று வினவியபோதும், ''வேண் டாம்'' என்று பதில் கூறினார்கள். ''மூன்றில் ஒரு பங்கையேனும் இல்லாதவர்களுக்கு நான் அளித்து விடவா?'' என்று கேட்ட போது நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''அதுவம் அதிகமேயா கும். அல்லாஹ்வின் பிரீதியை நாடி ஒரு சிறு பங்கை நீர் அர்ப்ப ணிப்பீராக! எஞ்சியதை உம் சந்ததிகளுக்கு நீர் அளித்து பிறரிடம் அவர்கள் கையேந்தி யாசிக்காமல் தடுப்பீராக. ஸஅதே! உம்மு டைய மனைவியின் வாயில் நீர் ஊட்டும் ஒரு கவளச் சோற்றுக் காகவும் உம் வாழ்க்கை ஏட்டில் நீர் நன்மைகள் எழுதப் பெறு வீர்'' என்று கூறினார்கள்.

பின்னர் ஹழ்லரத் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள், "நாயகமே! மக்காவில் நான் மரணமடைந்துவிடில் மதீனாவின் தோழர்களையெல்லாம் நான் பிரிந்திருக்க நேருமே" என்று கவலையுடன் கேட்டபோது, "அல்ல ஸஅதே! நீர் நலம் பெற்றெழுவீர், உம்முடைய கரங்களால் நம்பிக்கையாளர்கள் பெரும் வெற்றிகளையும், நன்மைகளையும் அடையப் பெறுவதையும், விரோதிகள் அதிகமான தோல்விகளையும், நஷ்டத்தையும் அடைவதையும் காண்பீர்" என்று நன்மாராயம் கூறிய நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் திருக் கரங்களை ஏந்தி, "இறைவா! என் தோழர்களின் ஹிஜ்ரத்தை நீ பரிபூரணமாக்கி வைப்பாயாக! இங்கே அவர்களை மரணிக்கச் செய்து விடாதிருப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்களின் தீர்க்கதரிசனம் அணுவளவும் தவறி விடவில்லை. அந்நோயிலிருந்து நலம் பெற்றெழுந்த அதே ஹழ்லரத் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள்தாம் ஹழ்லரத் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களுக்கு அடுத்தபடியாக, இஸ்லாத்தின் இணையற்ற வீரராக விளங்கி, காதிஸிய்யாப் போரில் ஈராக்கை வென்று நோய்ப் படுக்கையில் இருந்தவாறே படை நடத்தி ஓர் இலட்சத்து இருபதினாயிரம் பாரஸீகர்களையும் புறமுதுகிட்டோடும்படிச் செய்து, ஈரானையும் வென்று இஸ்லாத்தின் கொடியைப் பறக்க விட்டனர். பாரஸீகக் கருவூலங்களிலிருந்து அவர்கள் மதீனாவுக்கு அனுப்பி வைத்த வெற்றிப் பொருள்கள் மட்டும் முப்பது கோடி பவுன்கள் இருக்கும் என்று காணப்படுகிறது.

இறைவனின் புனிதத் திரு வீட்டை இறுதி முறையாக இடம் சுற்றி வந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தங்களின் கண்ணீர்க் கண்ணாடியால் கஅபாவைக் கடைசி முறையாகக் கண்டு, பிரியா விடை பெற்றவர்களாகப் பிரிந்து மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

வெளி மாகாணங்களிலிருந்து வந்து ஹஜ்ஜில் பங்கேற்ற மக்கள், தாங்கள் பிரிந்து செல்ல 'கதீர் - அல் - கும்' என்ற இடத்தில் நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் விடை பெற்று நின்றனர். அப்போதும் அவர்களை நோக்கி அறிவுரை கூறிய அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்,

''மக்களே! நானும் உங்களைப் போன்ற மனிதனே. வெகு அண்மையில் என் இறைவனிடமிருந்து அழைப்பானது எனக்கு வரும் என்று நான் எதிர்பார்க்கிறேன். இந்த நிலையில் இரண்டு பொருள்களைப் பற்றி உங்களுக்கு அறிவுறுத்த நான் ஆசைப்படு கிறேன். அவற்றில் ஒன்று திருக்குர்ஆனாகும். அது உங்கள் கரங் களில் அல்லாஹ்வின் அமானிதமாகவும், நீங்கள் பின்பற்றத் தகுந்த வழிகாட்டியாகவும் இருக்கிறது. மற்றொன்று, 'அஹ்ல பைத்து'களாகிய என்னுடைய குடும்பத்தாருடன் நீதியுடன் நடந்து கொள்ளுமாறு உங்களுக்கு நான் அறிவுறுத்துகிறேன்'' என்று குறிப்பிட்டார்கள்.

ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களின் மீது சில குற்றச்சாட்டுகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டிருந்தன. அவை பொருத்தக் கேடானவை - மக்களை அவசரப்படுத்தி விட்ட - ஆதாரமற்றவை என்பதை உணர்த்திட அண்ணலார் (ஸல்) எண்ணினார்கள். மக்களை நோக்கி அவர்கள்,

ألستم تعلمون أني أولى بالمؤمنين من أنفسهم

''மக்களே! நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் ஆன்மாக் களை விட நான் நெருக்கமானவன் என்பதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா?'' என்று கேட்டார்கள்.

மக்கள், 'ஆம்' என்றனர்.

اَلَسْتُمْ تَعْلَمُوْنَ اَنِّيْٓ اَوْلٰى بِكُلِّ مُؤْمِنٍ مِّنْ نَّفْسِهٖ

''ஒவ்வொரு நம்பிக்கையாளருக்கும் அவருடைய ஆன்மாவை விட நான் நெருக்கமானவன் என்பதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா'' என மீண்டும் பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

மக்கள், 'ஆம்' என்றனர்.

அப்போது பெருமானார் (ஸல்) அவர்கள், அலீ (ரலி) அவர்களின் கரத்தைப் பற்றி உயர்த்திப் பிடித்தவர்களாக, ''யா அல்லாஹ்! எவருக்கு நான் நேசனோ அவருக்கு அலீயும் நேசமானவரே, அவர் யாரை நேசிக்கின்றாரோ அவரை நீயும் நேசி! அவர் யாரைப் பகைக்கின்றாரோ அவரை நீயும் பகைத்துக் கொள்'' என்று பிரார்த்தித்தார்கள்.

## புனித உலகை நோக்கி

மதீனாத் திருநகர் மீண்டு வந்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள், அதன் பின் இவ்வுலக வாழ்வைத் துறந்து எந்தக் கண்களும் கண்டிராத, எந்தக் காதுகளும் கேட்டிராத, எந்த அறிவும் உணர்ந்திராத மேலான மறுமைப் பேற்றினை அடைவதற்கான முயற்சிகளில் முனைப்புடன் ஈடுபட்டார்கள். வெகு விரைவில் தங்கள் இறைவனைச் சந்திக்கும் பேற்றினை எதிர்பார்த்தவர்களாக, பெரும்பகுதி நேரத்தை வணக்கத்திலும், பிழை பொறுக்த் தேடுவதிலும் கழித்து வந்தார்கள். எந்தத் தலத்திலும், எந்த நேரத்திலும் மக்கள் அவர்களை இறை தியானத்தில் மூழ்கியவர்களாகவே கண்டார்கள்.

ஒரு நாள் இரவு நிகழ்ச்சியை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: ''அன்று என் வீட்டில் துயில் கொண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் திடீரென இரவில் விழித்தெ

முந்து ஒரு போர்வையைத் தங்கள் மீது போர்த்திக் கொண்டவர்க ளாக நடக்கத் துவங்கினார்கள். 'என்ன நடந்ததோ' என்று நான் கலக்கமுற்றேன். அவர்கள் எங்கே செல்கிறார்கள் என்பதை அறி வதற்காக அவர்களைப் பின் தொடர்ந்தேன். இரு புறமும் பார்த் துக் கொண்டே சென்ற நபி பெருமான் (ஸல்) அவர்கள் மரணித்த வர்கள் அடங்கப் பெற்றிருந்த 'ஜன்னத்துல் பக்கீஉச் சென்றடைந் தார்கள். பின்னர் அங்கே தரையில் தங்களின் தலையை வைத்து நெடுநேரம் வரையிலும், இறந்து விட்டவர்களுக்காகவும், இற வாது இன்று இருப்பவர்களுக்காகவும் இனியும் இம்மார்க்கத் தில் இணையவிருப்பவர்களுக்காகவும் அழுது மன்றாடிப் பிரார்த்தித்தார்கள். அதன்பின் அங்கே அடங்கப் பெற்றவர்களின் கப்ருகளுக்கு நடுவே நின்றவர்களாக, 'கப்ருக்குடையவர் களே! உங்கள் மீது அல்லாஹ்வின் அருள் சொரியப்படுவதாக. நீங்கள் எங்களுக்கு முன்னதாகச் சென்று விட்டீர்கள். முந்தி னதை விட மோசமானதாகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும் அலை போல் திரண்டு வரும் குழப்பங்களைக் கொண்டும் பேதங்களைக் கொண்டும் சூழப்பட்டுள்ள மக்கள் வாழும் இவ் வுலகை விட்டும் நீங்கள் சென்ற இடமே அருள் பெற்றதாகும். வெகு விரைவில் நாங்களும் உங்களைச் சந்திப்போம்' என்று கூறினார்கள். அதன் பின், ''இறைவா! அவர்களின் பாவங்களை மன்னிப்பாயாக. அவர்கள் மீது நீ சொரியும் எல்லா நல்லருள்க ளையும் எங்கள் மீதும் சொரிந்தருள்வாயாக' என்று பிரார்த்தித் தார்கள். மீண்டும் பெருமானார் (ஸல்) அவர்கள், 'மண்ணறை யின் தோழர்களே! ஆண்டுதோறும் அல்லாஹ்வின் திரும றையை என்னிடம் ஒரு முறை ஓதக் கேட்கும் வானவர் ஜிப்ரஈல் (அலை) இவ்வாண்டு இருமுறை ஓதக் கேட்டதன் மூலம் என் வாணாளின் முடிவு அண்மி விட்டதைக் குறிப்பால் உணர்த்தி விட்டார் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்' என்று கூறி விட்டுத் திரும்பி விட்டார்கள்.''

ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: மரணத்துக்கு ஒரு மாதம் முன்பாக நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் மிக நெருக்கமான தங்கள் தோழர் களை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்துக்கு வரவ ழைத்தார்கள். நாங்கள் யாவுரும் புனிதச் சந்நிதானத்தில் கூடியி ருந்தோம். பரிவு நிறைந்த பார்வையை எங்கள் மீது செலுத்திய அவர்களின் கண்களில் நீர் தேங்கி நின்றது. பிரிவாற்றாமை அவர் களின் நெஞ்சை அழுத்துவதை நாங்கள் உணர முடிந்தது. இறை வனுக்கு என்றென்றும் அஞ்சி நடக்குமாறு எங்களுக்கு நல் லுரை புகன்று, எங்களுக்காக நெடு நேரம் பிரார்த்தார்கள்.''

ஹழ்லரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறும் நிகழ்ச்சி:

''ஒரு நாள் எங்களுக்கிடையே அமர்ந்திருந்த நபிகள் பெரு மான் (ஸல்) அவர்கள், ''இதோ, நான் என் சகோதரர்களைக் காண்கிறேன்'' என்றார்கள்.

''பெருமானே! நாங்களே உங்கள் சகோதரர்கள் அல்லவா!'' என்று நாங்கள் கேட்டோம்.

''நீங்கள் என் தோழர்கள்; என் கூட்டாளிகள். ஆனால் என் சகோதரர்கள் என் மரணத்துக்குப் பின்னால் வருவார்கள். என் மீது ஈமான் கொள்வார்கள். அவர்களுக்காக நான் ஹவ்ழ்லுல் கவ்ஃஸருக்கருகில் முற்கூட்டியே சென்று காத்திருப்பேன்'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

''பெருமானே! தங்களுக்குப் பின்னர் வரக் கூடிய சகோதரர் களைத் தாங்கள் எவ்விதம் அடையாளம் கண்டு கொள்வீர்கள்?'' என்று கேட்டோம்.

''பெருமானார் (ஸல்) அவர்கள் ''வெண்ணிற முகமுடைய உங்களுடைய குதிரையானது மற்றக் குதிரைகளோடு கலந்து விட்டால் நீங்கள் உங்கள் குதிரையைக் கண்டுபிடிக்க மாட்டீர்

களா? இதே விதமாகவே நானும் என் சமூகத்தவர்களை அடையாளம் புரிந்து கொள்வேன். என் இறைவன், அவர்களின் கை, கால், முகம் ஆகிய 'உளூ'வினால் கழுவப்பட்ட பாகங்களைப் பகலவனைப் போல் ஒளி வீசச் செய்வான்'' என்றுரைத்தார்கள்.''

ஒரு புறம் அல்லாஹ்வின் அருளும் மக்காவின் வெற்றியும் கிடைத்து தங்களின் மார்க்கமானது சம்பூரணம் பெற்ற மகிழ்ச்சியும், மறுபுறம் சமுதாயத் தோழர்களை விட்டும் பிரிய வேண்டிய சோகமும் மாறி மாறித் தோன்ற அவ்விரண்டுக்கும் இடையே, ஆரம்ப காலத்தில் தங்களின் வாழ்நாளை இஸ்லாத்துக்காகப் பணயம் வைத்து, சோதனைக் காலங்களில் சலியாது தங்களின் அருகே நின்று, தங்கள் துன்பங்களிலும் துயரங்களிலும் பங்கேற்று, அறப் போர்க்களங்களில் முன் நின்று, இறைவனின் மார்க்கத்திற்காகத் தங்களது இன்னுயிர்களை அர்ப்பணித்த வீரத் தியாகிகளின் நினைவு பெருமானார் (ஸல்) அவர்களின் உள்ளத்தைத் தொடுகிறது. எட்டாண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட தியாக வரலாற்றில் தங்களின் பெயரையும் உயிரையும் பதிய வைத்து விடைபெற்ற வீரத் தோழர்கள் இன்று உயிரோடிருந்து, எந்த மார்க்கத்துக்கு உயிரூட்டத் தங்களின் உயிர்களைக் காணிக்கையாக்கித் தந்தார்களோ அந்த 'இஸ்லாம்' அரபு பூமி முழுமைக்கும் ஒளி வீசும் மணி விளக்காய்ச் சுடர் பரப்பும் காட்சியைக் காண்பார்களேயானால் எத்துணை மகிழ்வார்கள் என்ற நினைவு அலைகளினூடே நபி பெருமானார் (ஸல்) அவர்களின் கண்கள் குளமாயின. உஹது மலைச் சாரலில் ஓய்வு கொண்டு றங்கும் அந்தப் புனித ஷுஹதாக்களைக் கண்டு அவர்களுக்காகப் பிரார்த்தித்து வர நாடிப் புறப்பட்டார்கள்.

உஹது மலைச் சாரலை வந்தடைந்த நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் சத்தியத்தை நிலை நிறுத்த உயிர் நீத்த அவ்வுத்த

மத் தியாகிகளுக்கு மேலான நற்பதவிகள் கிடைக்கப் பெறப் பிரார்த்தித்த பின்னர், அவர்களை நோக்கி, 'இறைவா அருள் பெற்ற என் தியாகத் தோழர்களே! வெகு விரைவில் உங்களுக்கி டையில் என்னைக் காண்பீர்கள். மண்ணறையின் தோழர்களே! உங்களுக்கு நான் சாட்சியாக இருக்கிறேன்'' என்று கூறினார்கள்.

அருகிலிருந்த ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், ''யா ரஸ ூலல் லாஹ்! நாங்களும் இஸ்லாத்தின் மூலம் அவர்களின் சகோதரர்களேயல்லவோ? அவர்களே போன்று நாங்களும் இஸ்லாத்தைத் தழுவினோமல்லவா? அவர்களே போன்று நாங் களும் அல்லாஹ்வுக்காக வாளேந்திப் போர் புரிந்தோ மல்ல வா?'' என்று கேட்டபோது, ''ஆம்'' என்று பதில் கூறிய நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''ஆனால் எனக்குப் பின்னர் என் னென்ன புதுமைகளை நீங்கள் உண்டாக்குவீர்களோ! நான் அறி யேன்'' என்றார்கள்.

அதனைக் கேட்ட ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், ''இறைவனின் தூதர் அவர்களே! தங்களுக்குப் பின்னரும் நாங் கள் உயிர் வாழ்வோமா?'' என்று கேட்டு அழுதார்கள்.

அன்று மாலை ''மஸ்ஜிதுன் னபவீ'யை வந்தடைந்த நபி கள் பெருமான் (ஸல்) அவர்கள், மிம்பரில் ஏறி அமர்ந்தவர்க ளாக, ''அருமைத் தோழர்களே! மறுமையின் தலைவாயிலை நோக்கி இப்போது என் முகத்தை நான் திருப்பிக் கொண்டிருக்கி றேன். இவ்வுலகைப் படைத்த என் இறைவனிடத்தில் நான் உங்களுக்காகச் சென்று பரிந்துரைப்பேன். முஸ்லிம்களின் ஆட் சியும், அதிகாரமும் வெகு தொலைவுக்கு விரிந்து பரந்து இருப் பதை இப்போது என் கண்களால் நான் காண்கிறேன். கிழக்கிலி ருந்து மேற்கு வரையிலும் இஸ்லாத்தின் கொடியானது வானளா விப் பறப்பதை இப்போது நான் பார்க்கிறேன். இறைவனின்

இம்மார்க்கத்தை ஏந்திச் செல்பவர்களின் கரங்களிலே உலகக் கருவூலங்களின் திறவு கோல்கள் இருப்பதை நான் இப்போது காண்கிறேன். நீங்கள் அல்லாஹ்வுக்கு எதனையும் இணை வைக்க மாட்டீர்கள் என்பதில் நான் பரிபூரணத் திருப்தி கொண் டிருக்கிறேன். ஆனால் அதிகாரத்துக்காகவும் செல்வத்துக்காக வும் உங்களுக்கிடையில் வேற்றுமையும், பிளவும், குழப்பங்க ளும், குரோதங்களும் உண்டாகுமோ என்ற அச்ச உணர்வை நான் அடைகிறேன். அத்தகைய துர்ப்பாக்கிய நிலைக்கு உங் களை ஈடுபடுத்திக் கொள்ளாமல் எச்சரிக்கையுடன் இருங்கள்! இத்தகைய பயங்கரப் பிளவுகளாலும் குழப்பங்களாலுமே முந் திய சமுதாயங்கள் பல அழிந்தன என்பதை நீங்கள் நினைவில் நிறுத்துங்கள்!

''முஸ்லிம்களே! அல்லாஹ் உங்கள் மீது பேரருள் புரிவா னாக. வல்லமை மிக்க அவனுடைய உதவிப் படைகளைக் கொண்டு நீங்கள் செல்லும் திசைகளிலெல்லாம் உங்களுக்கு மகத்தான வெற்றியை ஈட்டித் தந்து வாகை சூட்டுவிப்பானாக! புகழையும், கண்ணியத்தையும், செல்வத்தையும், மகிழ்ச்சியை யும் உங்கள் மீது பொழிந்தருள்வானாக! அல்லாஹ்வுக்கு அஞ் சிக் கொள்ளுங்கள்! உங்களின் நடவடிக்கைகளை அணுவணு வாக அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதை நினைவில் வையுங்கள்! என் சக்திக்கு இயன்றவரை இஸ்லாத்தின் எல்லாப் போதனைகளையும் உங்களுக்குக் கற்பித்து விட்டேன். உலகங் கள் யாவும் பிரபஞ்சத்தைப் படைத்த அல்லாஹ்வுக்கே சொந் தம். எனவே உங்களை நீங்கள் மேன்மையாக நினைத்து மற்றவர் களைத் தாழ்மையாக நினைப்பதன் மூலம் இறைவனின் இப்பூ மியில் அவனின் அடியார்களுக்கிடையில் பெருமையும் கர்வ மும் கொள்ளாதீர்கள்'' என்று உரையாற்றினார்கள்.

பின்னர் அவர்கள்,

تِلْكَ الدَّارُ الْآخِرَةُ نَجْعَلُهَا لِلَّذِينَ لَا يُرِيدُونَ عُلُوًّا فِي الْأَرْضِ وَلَا فَسَادًا وَالْعَاقِبَةُ لِلْمُتَّقِينَ ○

''(மிக்க பாக்கியம் பெற்ற) அந்த மறுமையின் வீட்டையோ, பூமியில் பெருமையையும் விஷமத்தையும் விரும்பாதவர்களுக்கே நாம் (சொந்தமாக) ஆக்கி விடுவோம். ஏனென்றால் (நல்ல) முடிவு பக்தியுடையவர்களுக்குத்தான்.'' (28:83)

أَلَيْسَ فِي جَهَنَّمَ مَثْوًى لِلْمُتَكَبِّرِينَ ○

''கர்வங் கொண்ட அவர்கள் தங்குமிடம் நரகத்தில் அல்லவா (இருக்கிறது.'') (39:60) என்ற வசனங்களை ஓதி, ''உங்கள் மீதும் இன்னும் இஸ்லாத்தின் மூலம் என் அணியில் இணையவிருக்கும் அனைவர் மீதும் சாந்தியுண்டாக!'' என்று கூறிப் பிரார்த்தித்தார்கள்.

''பெருமானார் (ஸல்) அவர்களின் அன்றையப் பேருரை ஒரு சமுதாயச் சிற்பி தம் சமுதாயத்தை நோக்கிச் செய்யும் பிரிவுரையாக எங்களுக்குத் தெரிந்தது'' என்று ஹழ்லரத் உஸ்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

அங்கே அமர்ந்திருந்த ஹழ்லரத் நவாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) அவர்கள், உள்ளம் பொறுக்க முடியாமல், ''யா ரஸூலல்லாஹ்! இது விடை பெறும் பிரிவுரையாக வல்லவோ தெரிகின்றது'' என்று நபி பிரான் (ஸல்) அவர்களிடமே கேட்டு விட்டார்கள்.

'ஹஜ்ஜததுல் விதா' என்னும் விடை பெற்ற ஹஜ்ஜிலிருந்து மதீனாத் திருநகர் வந்து சேர்ந்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள், ஏறத்தாழ இரண்டரை மாதங்கள் வரை தங்களின் தோழர்களுக்கு அப்போதைக்கப்போது அறிவுரை கூறி வந்தார்கள்.

அதே காலகட்டத்தில், முன்பு ஸிரியாவின் எல்லையில் ஹழ்லரத் ஜ்ஸைத் (ரலி) அவர்களின் கொலைக்குக் காரணமாக எதிரிகளை மீண்டும் சென்று தோற்கடிப்பதற்காக, ஹழ்லரத் ஜ்ஸைத் (ரலி) அவர்களின் மகனார் ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர்களின் தலைமையில் ஒரு படையை அமைத்து ஸிரியாவை நோக்கிப் புறப்படுமாறு ஆணையிட்டார்கள்.

ஸஃபர் மாதம் 28-ஆம் நாள் பள்ளியிலிருந்து நபி பெருமான் (ஸல்) அவர்கள் வீடு திரும்பிய போது அங்கே ஆயிஷா (ரலி) அவர்கள், "அந்தோ என் தலையே" என்று தலைவலியால் அரற்றிக் கொண்டிருந்தார்கள். உள்ளே நுழைந்த பெருமானார் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! எனக்கும்தான் தலையை வலிக்கிறது" என்று கூறித் தங்களின் தலையைக் கையால் பிடித்துக் கொண்டார்கள். அதன்பின்னர் தங்கள் அருமை மனைவியாரின் அருகில் அமர்ந்து "ஆயிஷா! இந்தத் தலைவலியால் நீ இப்பொழுதே மரணமடைந்து நானே உன்னைக் குளிப்பாட்டிக் கஃபனிட்டுத் தொழுவித்து என் கரங்களாலேயே அடக்கம் செய்ய நேர்ந்தால் எப்படி இருக்கும்?" என்று வேடிக்கையாகக் கேட்டார்கள். இதைக் கேட்டு மகிழ்ந்த ஆயிஷா நாயகியார், "ஆகா பெருமானே! தங்கள் கரங்களாலேயே அல்லவா என் காரியங்கள் அத்தனையும் முடியும். அப்படியானால் இப்போதே என் தாய் வீடு சென்று ஒரு மணமகளைப் போல என்னை அலங்கரித்துக் கொண்டு ஒரு நொடிப் பொழுதில் திரும்பி விடுகிறேனே!" என்று கேட்டனர்.

ஆயிஷா நாயகியாரின் தலைவலி மறைந்து அவர்களின் முகத்தில் குதூகலம் தோன்றியது கண்டு பெருமானார் (ஸல்) அவர்களும் மகிழ்ந்தார்கள்.

அந்தத் தலைவலியே நபி பெருமான் (ஸல்) அவர்களின் மரணப் படுக்கைக்கு முதல் அடிக்கல் என்று கூறலாம். மறுநாள்

இறைத் தூதர் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர் ஒருவரின் மரணச் சடங்கில் கலந்து விட்டு 'ஜன்னத்துல் பகீஃ'இலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். வழியிலேயே தலைவலியோடு காய்ச்சலும் சேர்ந்து கொண்டது. அருகில் இருந்த ஹழ்லரத் அபூ ஸஈதல் குத்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஒரு முரட்டுப் போர்வையைத் தங்களின் மீது போர்த்தியிருந்தார்கள். காய்ச்சலின் வேகம் அதன் மேலாகவே வெளியாகிக் கொண்டிருந்தது. அவர்கள் அணிந்திருந்த தலைப் பாகையை நான் தொட்டேன். அதன் கொதிப்பைக் கண்டு எனக்கு வியப்பேற்பட்டது. ''அல்லாஹ்வின் ரஸூலே! தங்களுக்கா இத்தகைய கடுமையான காய்ச்சல்?'' என்று கேட்டேன். ''ஆம்! நபிமார்கள் இப்படித்தான் கடுமையான வேதனைகளில் ஈடுபடுத்தப்படுகிறார்கள். அதற்கான பலனும் அவர்களுக்கு மற்றவர்களுக்குக் கிடைப்பதை விட இரட்டிப்பாகக் கிடைக்கும்'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

''அல்லாஹ்வுடைய ரஸூலே! நபிமார்களுக்கு அடுத்தபடியாக இறைவனால் அதிகம் சோதிக்கப்படுபவர்கள் யார்?'' என்று அடுத்துக் கேட்டேன். ''நேர்வழியின் மீதிருப்பவர்கள்'' என்று சட்டெனப் பதில் தந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''அல்லாஹ் அவர்களை வறுமையைக் கொண்டு சோதிப்பான். ஓர் உடுத்தாடையைத் தவிர அவர்களிடம் வேறொன்றும் இருக்காது. அவர்கள் பேன் கடிகளைத் தாங்கிக் கொண்டு அமைதியுடன் அடங்கி இருப்பர். ஆனால் அவர்களின் வறுமையில் கிடைக்கும் இன்பம் உங்களின் சுக போகத்தில் கிடைப்பதை விட மேலானதாகும்'' என்று கூறினார்கள்; ''வணக்கவாளிகளில் மேலானவர்களுக்கு சோதனைகளும் அதிகமாக இருக்கும். குறைந்த வணக்கமுடையவர்களுக்கு இன்னல்களும் குறைவாக இருக்கும். பக்திமான்கள் இவ்வுலகை விட்டும் புறப்படும்

போது இத்தகைய வருத்தங்களால் அவர்களின் பாவங்கள் கழு வப்பட்டுத் தூய்மைப்படுத்தப்பட்டிருப்பார்கள்'' என்றும் கூறி னார்கள்.

இவ்வாறு அளவளாவிக் கொண்டே, ஹழ்லரத் அபூ ஸஈ தல் குத்ரீ (ரலி) அவர்களின் தோள்களில் கைகளை வைத்துத் தாங்கியவாறே நபி பெருமான் (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களின் வீட்டை அடைந்தார்கள். அன்றைய தினம் பெருமா னார் (ஸல்) அவர்கள் தங்கும் முறை அவ்விடமாகவே இருந்தது.

பலதார மணத்தை அனுமதித்துள்ள இஸ்லாம் அந்த மனை விமார்களிடையே தவறாத நீதியையும் பாகுபாடற்ற அன்பு செலுத்தப்பட வேண்டியதையும் பிரதான வரம்பாக அமைத்தி ருக்கிறது. இதனைச் சிறந்த முறையில் நடைமுறைப்படுத்திக் காட்டக் கூடிய அழகிய முன்மாதிரியாக, நபி பெருமான் (ஸல்) அவர்களே வாழ்ந்து காட்டினார்கள். உண்பதிலும் உடுத்துவதி லும் மட்டுமேயல்லாமல் மனைவியர்களோடு தங்குவதிலும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் சரி நீதியைக் கடைபிடித்து வந்தார்கள். அதே முறைப்படி அன்று அன்னை மைமூனா (ரலி) அவர்களின் வீட்டில் வந்து தங்கினார்கள். ஆனால் சற்று நேரத் திற்குள் அவர்கள் நோய்வாய்ப்பட்ட செய்தியறிந்த எல்லா மனைவிமார்களுமே தங்களின் அருமைக் கணவருக்குப் பணி விடை செய்ய அங்கே வந்து சேர்ந்தனர். அவர்கள் அனைவரை யும் ஒரு சேரக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''நாளை நான் தங்கும் முறை எங்கே?'' என்று இரண்டு அல்லது மூன்று முறை அவர்களைக் கேட்டார்கள். நடக்கவும் முடியாத பலஹீன மான நிலையில் அவர்கள் திரும்பத் திரும்பக் கேட்ட அந்த கேள்வியை நபிபெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் இதயப் பேரரசியாக விளங்கிய அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டில் தங்க விரும்புகிறார்கள் என்பதற்கு அறிகுறியாக எல்லா

மனைவிமார்களுமே புரிந்து கொண்டனர். ஏனெனில், உம்முல் முஃமினீன்களில் எவரும் வெறும் இன்ப சுகத்தை அனுபவித்துத் தங்கள் கணவரிடம் உரிமைக்காகப் போராடும் மனைவிகளாக இருக்கவில்லை.

يٰنِسَآءَ النَّبِيِّ لَسْتُنَّ كَاَحَدٍ مِّنَ النِّسَآءِ

''நபியுடைய மனைவிகளே! நீங்களில் பெண்களில் மற்ற (சாதாரண) பெண்ணைப் போலல்ல'' என்று திருமறையின் (33:32) சாட்சியத்தைப் பெற்ற அவ்வன்னைமார்கள் அனைவருமே, வாழ்வளித்த ஓர் எஜமானருக்கு ஊழியம் செய்யக் கடமைப்பட்ட அடிமைகளாகத் தங்களை எண்ணி இருந்தவர்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு முன்பாக மேற்கொள்ளும் பணிவையும் பேணுதலையுமே ஈமானின் பிரதான அங்கமாக எண்ணி இருந்த அந்தத் தாய்மார்கள், தங்களின் கணவரின் சிரமத்தை எங்ஙனம் புரிந்து கொள்ளாதிருப்பர்? எனவே, அவர்கள் அனைவருமே தங்களின் திருக் கணவர் நோய் தீர்ந்து நலமடையும் வரை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டிலேயே தங்கியிருக்கச் சம்மதித்தனர். அவர்களின் அந்த அனுமதியானது நோயுற்றிருந்த நபி பெருமான் (ஸல்) அவர்களின் உள்ளத்துக்கு பெரும் மகிழ்ச்சி அளித்தது. புன்முறுவல் பூத்தவர்களாக, ஒரு போர்வையால் தங்களைப் போர்த்திக் கொண்டு, ஒருபுறம் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களின் தோல் மீதும், மறுபுறம் ஹழ்லரத் பழ்ல் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் தோளின் மீதும் தங்களின் கைகளை வைத்துத் தாங்கிக் கொண்டவர்களாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

ஏறத்தாழப் பத்து நாட்கள் வரை காய்ச்சலின் வேகம் நீடித்திருந்தது. மிகவும் பலஹீனமான நிலையிலும் நபி பிரான் (ஸல்) அவர்கள் அப்போதைக்கப்போது மெதுவாக நடந்து சென்று,

பள்ளியில் தொழுகையை நடத்தி வந்தார்கள்; வாழ்வின் இறுதி புதன் கிழமை மக்ரிபுத் தொழுகையைச் சிரமத்தோடு தொழ வைத்தார்கள். அத்தொழுகையில் திருமறையின் 'வல்முர்ஸ லாத்' என்னும் 50 ஆம் அத்தியாயத்தை ஓதிய நபி பெருமான் (ஸல்) அவர்கள், இரண்டாம் 'ரக்கஅத்' இறுதியில்,

فَبِأَيِّ حَدِيثٍ بَعْدَهُ يُؤْمِنُونَ

''இதற்குப் பின்னால் அவர்கள் எவ்விஷயத்தைத் தான் விசுவாசிப்பார்கள்'' என்ற 77 ஆம் வசனத்தையே இறுதியாக ஓதினார்கள். தொழுகை முடிந்து வீடு திரும்பிய உடனேயே நபி பெருமான் (ஸல்) அவர்கள் மயக்கமுற்று விட்டார்கள். வெகு நேரத்துக்குப் பின் மயக்கம் தெளிந்த போது ''இஷாவின் தொழுகை முடிந்து விட்டதா?'' என்று கேட்டார்கள்.

அப்போது தொழுகைக்காக அவர்களை அழைக்க அங்கே வந்திருந்த ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்கள், ''பெருமானே! தங்களை எதிர்பார்த்து மக்கள் காத்திருக்கிறார்கள்''என்று சொன்னது கேட்டு, நபி பெருமான் (ஸல்) அவர்கள் உடனடியாகத் தண்ணீர் கொண்டு வரச் செய்து ஒழ்லு செய்தார்கள்; ஆனால் உடனே மீண்டும் மயக்கமடைந்து விட்டார்கள். இவ்வாறாக மூன்று முறை நிகழ்ந்து விட்டது. அதன் பின்னர் ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்களிடம் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களைக் கொண்டு தொழுகையை நடத்துமாறு கூறும்படி ஏவினார்கள். நபியின் நேசர் பிலால் (ரலி) அவர்களின் இதயத்தில் அச்சொல்லானது இடிபோல் தாக்கியது. அதிர்ச்சியடைந்த ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்கள், ''என் நம்பிக்கைகள் மண்ணாய்ப் போயின. என் இடுப்பானது ஒடிந்து போனது. அந்தோ! என் அன்னை என்னைப் பெறாதிருந்தால் இன்றைய தினத்தை நான் சந்திக்காதிருப்பேனே'' என்று புலம்பியவர்களாகத் தலையைக் கையால் பிடித்துக் கொண்டே வந்தமர்ந்து விட்டார்கள். அவர்க

ளின் வாயானது பேசும் சக்தியையே இழந்து விட்டது. அதற்கி டையில் பிலால் (ரலி) அவர்களைக் காணாமல் ஹழ்லரத் அப் துல்லாஹ் இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள் புனித சந்நிதானத்தில் வந்து நின்றார்கள். அவர்களிடம் பெருமானார் (ஸல்) அவர்கள், ''என்னை எதிர்பார்க்க வேண்டாம். மக்களிடம் அவர்களையே தொழுது கொள்ளச் சொல்வீராக'' என்று கூறி அனுப்பி விட்டார் கள். இமாமத்தைப் பற்றி ஹழ்லரத் பிலால் (ரலி) அவர்களிடம் முன்னமேயே கூறி விட்டதால் ஹழ்லரத் இப்னு ஸம்ஆ (ரலி) அவர்களிடம் இப்போது குறிப்பிடவில்லை.

அருகே நின்றிருந்த அன்னை ஆயிஷா நாயகியார் அவர்கள் அதுபற்றிச் சிந்தித்தார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களை என்றும் பிரிந்திராத தங்களின் தந்தை முதன் முதலாக தொழுகை யின் தலத்தில் தங்கள் தலைவர் இல்லாத நிலையை எவ்வாறு தாங்குவார்கள் என்ற கவலை அவர்களுக்கு ஏற்பட்டது. எனவே, அவர்கள் நபி பெருமான் (ஸல்) அவர்களை நோக்கி, ''பெருமானே! என் தந்தை அபூபக்கர் (ரலி) அவர்கள், இளகிய மனமுடையவர்கள். திருமறையை ஓதக் கேட்கும்போதே அழுது விடக் கூடிய அவர்கள் இன்று தொழுந்தலத்தில் தங்க ளின் பிரிவைத் தாங்க மாட்டார்கள். இந்நிலையில் அவர்கள் தங்களின் குரல் மற்றவர்களுக்குக் கேட்கும்படியாக ஓதச் சக்தி பெற மாட்டார்கள். எனவே தாங்கள் உமர் (ரலி) அவர்க ளையோ மற்றவர்களையோ இப்பணியில் நிறுத்துங்கள்'' என்று யோசனை கூறினார்கள். ஆனால் நபிபெருமான் (ஸல்) அவர் களோ 'அபூ பக்கரையே தொழுகை நடத்தச் சொல்லுங்கள்' என்று மீண்டும் கூறினார்கள். ஆயிஷா நாயகியார் மறுபடியும் முன் போலவே பெருமானார் (ஸல்) அவர்களிடம் கூறி அன்னை ஹஃப்ஸா (ரலி) அவர்களையும் தங்களுக்குத் துணை யாக நின்று அப்பணியை ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களிடம் ஒப்படைக்க யோசனை கூறும்படி பணித்தனர். அன்னை ஹஃப்ஸா (ரலி) அவர்களும் அவ்வாறே பெருமானார் (ஸல்)

அவர்களிடம் பரிந்துரைத்தனர். ஆனால் மூன்றாம் முறையாக அவ்வாறு கூறப்பட்டபோது, பெருமானார் (ஸல்) அவர்கள் இருவரையும் நோக்கி, ''யூஸுஃப் நபிக்கு யோசனை கூறிய பெண்களைப் போல் அல்லவா நீங்கள் ஆகி விட்டீர்கள்'' என்று கடிந்து கொண்டார்கள்.

அங்கே பள்ளிவாசலில் ஹழ்ரத் பிலால் (ரலி) இப்னு ஸம்ஆ (ரலி) இருவரும் முன்பின்னாக வந்து சேர்ந்தனர். பிலால் (ரலி) அவர்களோ உள்ளத்தின் வேதனையால் பேசச் சக்தியற்று நின்று விட்டனர். அந்நிலையில் பெருமானார் (ஸல்) அவர்களின் வரவுக்காகக் காத்திருந்த ஸஹாபாக்களிடையே வந்து சேர்ந்த இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம் நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறிய செய்தியை அறிந்திருக்கவில்லை. எனவே தற்செயலாக அவர்களின் பார்வை ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் மீது படவே அவர்களின் கரம் பற்றி நீங்கள் தொழுகையை நடத்துங்கள் என்று கூறி விட்டனர்.

ஆனால் ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் குரல் உரத்ததாக அமைந்திருந்த காரணத்தால் அவர்களின் முதலாம் தக்பீரின் ஓசையே நபி பெருமான் (ஸல்) அவர்களின் செவியில் விழுந்து விட்டது. வீட்டாரிடம் ''இந்தக் குரல் உமருடையதல்லவோ'' என்று கேட்டார்கள். ''ஆமாம்! இது உமர் (ரலி) அவர்களுடையதாகவே தெரிகிறது'' என்று வீட்டிலுள்ளோர் பதில் அளித்தார்கள். ''இந்தச் செயல் இறைவனுக்குப் பிடித்தமானதாக இல்லை. அபூபக்கரே தொழுகையை நடத்த வேண்டும்'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கண்டிப்புடன் உத்தரவிட்டார்கள்.

முந்தின வரிசையிலேயே நின்றிருந்த ஹழ்லரத் அபூபக்கரிடம் நபி பெருமான் (ஸல்) அவர்களின் உத்திரவானது சேர்ப்பிக்கப்பட்டபோது அதனை ஏற்று அவர்கள் முன் சென்றார்கள். அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் ஊகம் தவறாகவில்லை. உத்தரவுக்குப் பணிந்து முன் சென்ற 'ஸித்தீக்குல் அக்பர்' அவர்

கள் தொழுகைக்காக நபி பெருமான் (ஸல்) அவர்கள் நிற்கும் தலத்தைக் கண்டதுமே உணர்ச்சிகளால் உந்தப்பட்டார்கள். கண்ணீர்க் கண்களோடு திரும்பிப் பார்த்த அவர்களுக்கு முன்னால் எல்லாத் தோழர்களுமே கண்ணீரோடுதான் காட்சியளித்தனர். ஆணைக்கு அடிபணியும் அந்தச் சீடர் அடக்கத்துடன் தங்களுக்கிடப்பட்ட பணியைச் செய்து முடித்தார்கள்.

அதுமுதல் நபி பெருமான் (ஸல்) அவர்களின் இறுதிக் காலம் வரை எல்லாத் தொழுகைகளையும் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களே நடத்தினர் என்று கூறலாம். தொழுகை முடிந்த பின்னால் நபி பெருமான் (ஸல்) அவர்களின் உத்தரவின்றி தங்களை முன்னிறுத்தியதற்காக இப்னு ஸம்ஆ (ரலி) அவர்களை ஃபாருக்குல் அஅலம்' அவர்கள் கடிந்து கொண்டார்கள். இறைவனின் மீது ஆணையாக பிலால் (ரலி) அவர்களிடம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிய விபரம் தமக்குத் தெரியாது என்று கூறி ஹழ்லரத் இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள் தம் செயலுக்காக வருத்தம் தெரிவித்தார்கள்.

மறுநாள் காலை மஸ்ஜிதுன் னபவீயானது சோகப் போர்வையால் போர்த்தப்பட்டருந்தது. பெருமானாரை விட்டும் நீங்காமல் வருத்தி வந்த நோயின் காரணத்தால் மிகவும் கவலையுற்றிருந்த ஸஹாபாக்கள் முந்தின நாள் இஷாத் தொழுகைக்கு அவர்கள் பள்ளிக்கே வராமல் இருந்து விட்டது பற்றி பெரிதும் மனக் கிலேசமடைந்தார்கள். ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களும் ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களும் அன்ஸார்களின் ஒரு கூட்டம் அழுது கொண்டிருந்ததைக் கண்டனர். என்ன காரணம் என்று அவர்களிடம் வினவப்பட்டபோது, "பெருமானாரின் நேசம் எங்களை அழச் செய்தது" என்று அவர்கள் கூறினர். ஸஹாபாக்களின் இந்தச் சோக நிலையை ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களும் ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களும் பெருமானார்(ஸல்) அவர்களிடம் எத்தி வைத்தனர். அதே சமயம்

ஸிரியாவுக்குச் செல்லும் படையில் வயதிலும், அனுபவத்திலும் முதிர்ந்த பல ஸஹாபாக்களுக்கு மேலாக 20 வயதே நிரம்பப் பெற்ற இளைஞரான ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர்கள் தளபதியாக நியமிக்கப்பட்டிருப்பது பற்றி சில ஸஹாபாக்கள் முணுமுணுத்த செய்தி பெருமானார் (ஸல்) அவர்களை எட்டியிருந்தது.

ஒருபுறம் சில ஸஹாபாக்களின் துயர நிலை, மறுபுறம் ஒரு சில ஸஹாபாக்களின் குழம்பிய சிந்தனை. இந்த இரண்டு நிலைகளிலும் நாயகம் (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களைச் சந்தித்து நல்லுரை கூற நாடினார்கள்.

உடனடியாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஏழு வெவ்வேறு கிணறுகளில் இருந்து ஏழு தோல் துருத்திகளில் தண்ணீர் கொண்டு வரச் செய்தார்கள். அன்னை ஹஃப்ஸா அவர்களின் பெரிய தண்ணீர்த் தொட்டியில் அமர்ந்து கொண்டு அவற்றை ஒவ்வொன்றாகத் தங்களின் மீது ஊற்றச் சொன்னார்கள். அவ்வாறு குளித்து முடித்தபோது அவர்களின் உடலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. உடனே ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களும் ஹழ்லரத் அலீ (ரலி) அவர்களும் இருபுறமும் தாங்கி வரத் தங்களின் பட்டுப் பாதங்கள் தரையில் இழுபட பள்ளியின் உள்ளே நுழைந்தார்கள்.

லுஹருடைய தொழுகையை நடத்திக் கொண்டிருந்த ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் நபி பெருமான் (ஸல்) அவர்கள் வருவது கண்டு பின்னால் வர எத்தனித்தார்கள். ஆனால் அப்படி வரவேண்டாம் என்று சைக்கினை செய்தவர்களாக அண்ணலார், தாங்கள் முன்னே சென்று ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு இடப்புறமாக அமர்ந்து கொண்டனர். அதன் பின் அருமை ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் தக்பீர் கூற ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அதனை உரத்துக் கூற மக்கள் அவர்களைப் பின்பற்றித் தொழுது முடித்தனர். தாங்கள் அமர்ந்த பின்

னும் தங்களுக்குப் பின்னால் நின்றிருந்த ஸஹாபாக்களை சைக் கினையால் அமரச் செய்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் தொழுகை முடிந்த பின் இமாமத் என்பது இமாமைப் பின்பற்று வதாகும்- இமாம் எவ்வாறு தொழுகிறாரோ அவ்வாறே மற்ற வர்களும் தொழ வேண்டும் என்று விளக்கினார்கள்.

தொழுகை முடிந்த பின்னர் மிம்பரின் முதற் படியிலேயே அமர்ந்து கொண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் அருமை ஸஹாபாக்களை நோக்கி உரையாற்றத் துவங்கினார்கள். இதுவே நபிமணியின் உலக வாழ்வின் இறுதிப் பேருரை என லாம். இறைவனைப் போற்றிப் புகழ்ந்து நன்றி தெரிவித்த பின் னர், ''மக்களே! உஸாமா இப்னு ஜ்ஸைதுடைய தலைமையைப் பற்றி நீங்கள் முணுமுணுப்பதாகக் கேள்விப்பட்டேன். இதற்கு முன் அவருடைய தந்தை ஜ்ஸைதை நான் தளபதியாக நியமித்த போதும் இவ்வாறே நீங்கள் முணுமுணுத்தீர்கள். உஸாமாவின் குறைந்த வயதே உங்களின் ஆட்சேபணைக்குக் காரணம் எனில் ஜ்ஸைதின் தலைமையைப் பற்றி நீங்கள் ஆட்சேபிக்கக் காரணம் என்ன? ஆனால் ஒருவனான என் இறைவனின் மீது ஆணையாக நான் கூறுகிறேன். ஜ்ஸைதும் தலைமைப் பதவிக்குத் தகுதியான வராகவே இருந்தார். இப்போது அவருடைய மகன் உஸாமா வும் அப்படியே. எனவே, உஸாமாவின் தலைமையில் நீங்கள் ஒன்றுபட்டுக் காரியமாற்றுங்கள். மனிதர்களில் ஜ்ஸைத் எனக்கு மிகவும் வேண்டியவராக இருந்தார். இப்போது உஸாமாவும் அப்படியே. அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுமாறு உங்க ளுக்கு நான் அற போதம் செய்கிறேன். அவனின் காவலிலேயே உங்களைப் பரஞ்சாட்டுகிறேன். இன்றும் எனக்குப் பின் என் றும் அவனே உங்களுக்குப் போதுமானவன்.

''மக்களே! தாம் விரும்பும் காலம் வரையிலும் இவ்வுல கில் தங்கி இருக்கவோ, அல்லது மேலான தம் இறைவனைச் சந்திக்கவோ, இந்த இரண்டில் ஒன்றைத் தெரிந்தெடுக்கும் உரி

மையை இறைவன் தன் அடியார் ஒருவருக்கு வழங்கினான். ஆனால் அந்த அடியார் தம் இறைவனின் சந்திப்பைத் தெரிந்தெடுத்துக் கொண்டார்'' என்று கூறி நபி பெருமான் (ஸல்) அவர்கள் நிறுத்தியபோது, துடித்தெழுந்த ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் ரஸூலே! எங்களின் உயிர்கள் எங்களின் உடைமைகள் எங்களின் உற்றார் உறவினர்கள் எங்களின் மனைவி மக்கள் யாவற்றையும் தங்களுக்குப் பிரதியாகத் தருவோம்'' என்று அழுத வண்ணமே கூறினார்கள்.

ஹழ்ரத் அபூபக்கர் அவர்களின் அந்த நிலை எம்பெருமான் (ஸல்) அவர்களையே நெகிழச் செய்தது. வாழ்க்கையின் ஆரம்ப நாட்களிலிருந்து இன்பத்திலும் துன்பத்திலும் தங்களின் நிழலாய்த் தொடர்ந்து வந்த அந்தத் தோழரின் கண்ணீர் நபி பெருமான் (ஸல்) அவர்களின் நெஞ்சைத் தொட்டது.

''தம் தோழமையால் எனக்குப் பேருதவி புரிந்தவர்களில் அபூ குஹாஃபாவின் மகனாகிய அபூபக்கரை விட மிஞ்சியவர் எவரும் கிடையாது. அபூ குஹாஃபாவின் மகன் அபூபக்கர் தம் உடலாலும் பொருளாலும் எனக்குப் பேருதவி புரிந்துள்ளார். இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் நீங்கள் ஒவ்வொருவரும் என்னிடம் ஆதாரம் தேடித் தெளிந்து என்னோடு இணைந்தபோது அபூபக்கர் என் சொல்லைக் கேட்டவுடன் என்னை ஏற்றார். என் இறைவனைத் தவிர்த்து உலகில் எவரையும் என் தோழமைக்குத் தெரிந்தெடுப்பதெனில் நான் அபூ குஹாஃபாவின் மகனையே தேர்ந்தெடுப்பேன். ஆனால் அன்பும் இஸ்லாமிய சகோதரத்துவமும் நமக்கிடையே இருக்கின்றன'' என்று புகழ்ந்த பெருமானார் (ஸல்) அவர்கள், ''அபா பக்கரே! நிலைமையைச் சமாளிப்பீராக!'' என்று ஆறுதல் கூறினார்கள். அதன் பின் எல்லாத் தோழர்களையும் கண்ணீரோடு கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் யாவரையும் நோக்கி, ''மக்களே! உங்களின் நபியின் பிரிவு பற்றி நீங்கள் அழுவதாகக் கேள்விப்பட்டேன். எதற்காக

நீங்கள் அழுகிறீர்கள், என்ன! எனக்கு முன் வந்த எந்த நபியே னும் தம் இறைவனிடம் திரும்பிச் செல்லாமல் தம் கூட்டத்தாரி டமே நிரந்தரமாகத் தங்கியுள்ளாரா, நானும் அவர்களைப்போல் இறவாமல் இருப்பதற்கு! எதற்காக நீங்கள் அழுகிறீர்கள்? உல கின் எல்லாச் சமுதாயங்களையும் விடவும் நற்பேறு பெற்ற சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள். எவர்களைக் கொண்டு திருப்தியடைந்தவராக அவர்களின் வருகைக்கான முன்னேற்பா டுகளைச் செய்வதற்காக - அவர்களின் நபியானவர் முன் செல் கின்றாரோ, நிச்சயமாக அவர்களே நற்பேறு பெற்றவர்கள். எவர் களைக் கொண்டு அவர்களின் நபியானவர் திருப்தியடையாமல் அந்த நபியின் முன்னிலையிலேயே இறைவனின் முனிவுக்கு அவரின் சமுதாயத்தார் ஆளாகின்றார்களோ அவர்களே மிக துர திருஷ்டசாலிகள்' என்று கூறினார்கள்.

தொடர்ந்து நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''முஸ்லிம் களே! எனக்குப் பின்னால் உங்களில் நான் இரண்டு வழிகாட்டி களை விட்டுச் செல்கிறேன். அவற்றுள் ஒன்று பேசக் கூடியது. அது திருக்குர்ஆனாகும். மற்றொன்று பேசாதது. அது மரணமா கும். நீங்கள் ஏதேனும் சிரமத்தைக் காணும்போது திருக்குர்ஆனி லும் என் நடை முறையிலும் பரிகாரம் தேடுங்கள். உங்களின் இதயங்கள் கடினமாகி விடும்போது மரணத்தை நினைவு கொள் ளுங்கள்!

''மக்களே! நீங்கள் ஒவ்வொருவரும் எனக்குச் செய்த பேரு தவிகளுக்கு நான் பிரதி செய்து விட்டேன். ஆனால் அபூபக்கர் எனக்குச் செய்த உதவிகளுக்கு என்னால் பிரதி செலுத்த இய லாது. எனக்குப் பகரமாக என் இறைவன் அவருக்கு மறுமையில் பிரதி செய்வான். உங்களின் இந்தத் தோழர் அபூபக்கர் உங்கள் யாவரிலும் அல்லாஹ்வுக்கு மிக நெருக்கமானவர். இந்தப் பள் ளியில் அபூபக்கரின் வாயிலைத் தவிர்த்து மற்றெல்லா வாயில்க ளையும் அடைத்து விடுங்கள்!'' என்று அறிவித்தார்கள்.

நுபுவ்வத்தின் திருவிளக்கானது அணையவிருப்பதை எச்ச ரிப்பதைப் போன்ற மரண அமைதி நிலவியது. ஹழ்லரத் அப் பாஸ் (ரலி) அவர்கள், ''இதன் காரணம் என்ன?'' என்று வினவி யதற்கு நபி பெருமான் (ஸல்) அவர்கள் ''இதனை நான் என் விருப்பத்தின் பேரில் கூறவில்லை. இறைவனின் கட்டளை யைக் கொண்டே கூறுகிறேன்'' என்றார்கள். ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள் பள்ளிக்கு அவர்கள் வருவதை வீட்டிலிருந்தே தாம் காணும்படியாக ஒரு துவாரமேனும் தாங்கள் வைத்துக் கொள்ள அனுமதி வேண்டியபோது, தங்களின் விருப்பமின்மை யைப் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் தலையசைவின் மூலம் தெரிவித்தார்கள். இது ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்க ளின் தனித் தன்மையை உலகிற்குப் பறை சாற்ற இறைவன் செய்த ஏற்பாடாகும்.

மீண்டும் பேசத் துவங்கிய பெருமானார் (ஸல்) அவர்கள், ''அன்ஸார்களே! நீங்கள் முஹாஜிர்களுக்கு உதவுங்கள்! அவர்க ளும் உங்களுக்கு நன்மையே செய்து வருவார்களாக!

''முஹாஜிர்களே! உங்களுக்கு உதவி புரிந்த அன்ஸார்க ளுக்கு நீங்கள் நன்மையானதையே செய்யுங்கள்! அவர்கள் உங்க ளுக்காகத் தங்குமிடங்களையும், மார்க்கத்தையும் சித்தப்படுத்தி யவர்கள். எனவே அவர்களிடம் நேர்மையாக நடந்து கொள்ளுங் கள்! தங்களுக்குக் கிடைத்த இலாபங்களை அவர்கள் உங்க ளோடு சமமாகப் பங்கிட்டுக் கொண்டவர்கள். தங்கள் வீடுகளில் அவர்கள் உங்களுக்கு இடம் ஒதுக்கித் தந்தவர்கள். அவர்கள் வறுமையிலே வாடிய போதும் தங்களை விட உங்களை அதிகம் பரிபாலித்தவர்கள். மனிதர்களின் தொகை அதிகமாகும். அதே நேரம் இந்த அன்ஸார்களின் தொகை படிப்படியாகக் குறைந்து கொண்டு வரும். இறுதியில் உணவில் உப்பானது இருப்பதைப் போல் மனிதர்களிடையே இவர்கள் அருகியும் மறைந்தும் இருப்பார்கள். நான் புகலிடம் தேடிய என் உற்றார்கள் அவர் களே; நான் விட்டுச் செல்லும் என் சம்பத்துகள் அவர்கள். அவர்

களின் உதவிக்கு நன்றி செலுத்துங்கள்! அவர்களின் குறைகளைக் காணின் பொறுத்துக் கொள்ளுங்கள்! நான் சென்ற பின் அவர்களில் என்னைக் காணுங்கள்! இறைவனின் மீது ஆணையாக நான் உங்கள் மீது அன்புடையவனாக இருக்கிறேன். அவர்கள் தங்கள் கடமையைச் செய்து விட்டனர். இனி உங்கள் கடமையே எஞ்சியுள்ளது'' என்று கூறினார்கள்.

அதன் பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள்.

وَالْعَصْرِ ۝ إِنَّ الْإِنْسَانَ لَفِي خُسْرٍ ۝ إِلَّا الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَتَوَاصَوْا بِالْحَقِّ ۝ وَتَوَاصَوْا بِالصَّبْرِ ۝

''காலத்தின் மீது சத்தியமாக! மனிதன் (தன் ஆயுளை வீணில் செலவு செய்து) நிச்சயமாக நஷ்டத்தி(ன் வழியி)ல் இருக்கிறான். ஆயினும் எவர்கள் விசுவாசங் கொண்டு, நற்கருமங்களையும் செய்து சத்தியத்தை ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து (பாவங்களை விடுவதிலும் நன்மைகளைச் செய்வதிலும் ஏற்படும் கஷ்டங்களைச்) சகித்துக் கொள்ளுமாறும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து வந்தார்களோ அவர்களைத் தவிர, (இவர்கள் நஷ்மடையவில்லை)'' என்ற திருமறையின் 103- ஆம் அத்தியாயத்தை ஓதினார்கள்.

பின்னர், ''நிச்சயமாக இறைவனின் அனுமதி கொண்டே எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன. எனவே எந்த ஒரு பொருளும் கிடைக்கத் தாமதமானால் அதற்காக நீங்கள் அவசரப் பட வேண்டாம்! யாருடைய அவசரத்துக்காகவும் அல்லாஹ் எந்தக் காரியத்தையும் அவசரமாக முடித்துத் தரமாட்டான். வருங்காலத்தில் அதிகாரம் உங்கள் கையில் கிடைத்தால் பூமியில் விஷமஞ் செய்யாதீர்கள். உங்கள் உறவின் முறையாரை வெட்டாதீர்கள்.

"மக்களே! உங்களுக்கு முன் சென்ற யூதக் கிருஸ்துவ சமுதாயத்தார் தங்களுடைய நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கி விட்டதே போன்று நீங்களும் என்னுடைய அடக்கஸ்தலத்தை வணக்கஸ்தலமாக ஆக்கி விட வேண்டாம். தங்களின் நபியுடைய அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக்கி விட்டவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும்.

"அன்ஸார்களே! எனக்குப் பிறகு நீங்கள் புறக்கணிக்கப்படுவீர்கள். நீங்கள் பல சோதனைகளையும் துன்பங்களையும் சந்திப்பீர்கள். அவற்றை மிகுந்த பொறுமையோடு தாங்கிக் கொள்ளுங்கள் - என் ஹவ்ழுல் கவ்ஃஸருக்கருகில் என்னைச் சந்திக்கும் வரை. நான் உங்களுக்கு சாட்சியாக இருப்பேன். மறுமையில் என் ஹவ்ழுல் கவ்ஃஸருக்கு அருகே என்னை நீங்கள் சந்திப்பீர்கள். ஆஹா! இறைவனின் மீது ஆணையாக என் ஹவ்ழை நான் இதோ காண்கிறேன். நாளை அங்கு என்னைச் சந்திக்க விரும்புகிறவர்கள் அவசியமான விஷயங்களுக்காக வன்றி தங்களின் கரங்களையும் நாவையும் பாதுகாத்துக் கொள்வார்களாக!

"முஸ்லிம்களே! நானும் உங்களைப் போன்ற மனிதனே! நான் இப்போது என் உலக வாழ்வின் இறுதிக் கட்டத்தில் இருக்கிறேன். நான் உங்களில் எவருக்கேனும் ஏதேனும் கொடுக்க வேண்டியதிருக்கலாம். அதனை அவர் இப்போது கேட்டுப் பெற்றுக் கொள்வாராக! உங்களில் எவரையேனும் நான் அடித்துக் காயப்படுத்தி இருக்கலாம். இதோ என்னை அவர் அதற்குப் பிரதியாக அடித்துக் கொள்வாராக. சிறிதளவாயினும் எவரையும் நான் மானபங்கப்படுத்தி இருக்கலாம். இப்போது அவர் என்னை மானபங்கப்படுத்தி விடுவாராக! 'ரஸூலுல்லாஹ்வின் பகைமைக்கும் ஆத்திரத்துக்கும் நான் அஞ்சுகிறேன்' என்று யாரும் கூற வேண்டாம்! அவை இரண்டும் என் இயல்பிலும் பண்பிலும் இல்லாதவையாகும்" என்று கூறினார்கள்.

அத்துடன் தங்கள் உரையை முடித்து மாலைத் தொழுகையை நிறைவேற்றினார்கள். அதன்பின் அவர்கள் மீண்டும் மேடையில் அமர்ந்தபோது ஒருவர் எழுந்து தாம் முன்பொரு முறை நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு மூன்று திர் ஹங்கள் கடனாகக் கொடுத்திருப்பதாகக் கூறினார். நபி (ஸல்) அவர்கள் தங்களின் சகோதரர் ஹழ்லரத் பழ்ல் இப்னு அப்பாஸிடம் கூறி அக்கடனைத் தீர்க்கும்படி கூறினார்கள். மற்றொருவர் தாம் நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் மூன்று திர்ஹங்கள் கடன்பட்டிருப்பதாகக் கூறினபோது தங்கள் சகோதரரை அதனைப் பெற்றுக் கொள்ளுமாறு கூறினார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள், "உங்களில் எவரேனும் மன்னிக்க முடியாத பாவத்தினால் தங்களின் வாழ்க்கையைக் கறைபடுத்திக் கொண்டிருந்தால் கூறுங்கள்! அவரின் மன்னிப்புக்காக இப்போது நான் பிரார்த்திக்கிறேன்" என்று கூறினார்கள்.

கூட்டத்தின் நடுவே ஒரு தோழர் எழுந்து, "அல்லாஹ்வின் ரஸூலே! நான் ஒரு பொய்யன்; கபடன்; என் வாழ்க்கையில் நான் செய்யாது விட்ட பாவங்கள் எதுவுமே இல்லை. எனக்காகப் பிரார்த்தியுங்கள்!" என்று கூறி நின்றபோது அருகிலிருந்த ஹழ்லரத் உமர் (ரலி) அவர்கள், "போதும் தோழரே! நிறுத்தும்! உம்முடைய அழுக்காடையைக் கழுவிக் கொள்ளுட் எண்ணத்தில் மற்ற மனிதர்களின் கண்களுக்கு உம்மை நீரே சிறுமைப் படுத்திக்கொள்ள வேண்டாம்" என்றார்கள்.

நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களைக் கையமர்த்தியவர்களாய், "மறுமையின் மானக்கேட்டைவிட இம்மையின் மானக்கேட்டைத் தாங்குவது எளிது" என்று கூறி, "இறைவா! இவரை உண்மையாளராகவும் நன்றியுள்ளவராகவும் ஆக்கி வை! இவர் நடந்து சென்ற வெறுக்கத்தக்கப் பாதையிலிருந்து திருப்பி நேரான உன் பாதையின் மீது இவரை நடத்திச் செல்" என்று பிரார்த்தித்தார்கள். அதன் பின் ஆழ்ந்த

பொருள் செறிந்த ஒரு பார்வையை ஃபாரூக்குல் அஃலம் (ரலி) அவர்கள் மீது செலுத்தியவர்களாக, ''உமர் என்னோடிருக்கிறார். நான் உமரோடிருக்கிறேன். திண்ணமாக சத்தியம் உமரோடு இருக்கிறது. அவர் எங்கிருப்பினும் சரியே'' என்று கூறினார்கள்.

ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் எழுந்து, 'பெருமானே! தங்களின் இறுதி நேரம் எப்போது வரும்?'' என்று கேட்டார்கள். ''வெகு அண்மையில்'' என நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

''தங்களை நீராட்டுவது யார்?' என்று அவர்கள் கேட்ட போது, ''என் குடும்பத்தாரில் எனக்கு மிக நெருக்கமானவர்'' என்று பதில் கூறினார்கள்.

''எதைக் கொண்டு தங்களைப் போர்த்துவது?'' என்று கேட்டதற்கு, ''நான் அப்போது உடுத்தியிருக்கும் ஆடையைக் கொண்டே, அதற்கு மேலாக ஓர் எகிப்தியப் போர்வையையோ ஒரு யமானியப் போர்வையையோ போர்த்தி விடுங்கள்!'' என்று கூறினார்கள்.

''தங்களுக்கான இறுதித் தொழுகையை யார் தொழுவிப்பது?'' இக்கேள்வியைக் கேட்டபோது ஹழ்லரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களின் கண்களில் கண்ணீரானது வெடித்துக் கிளம்பியது.

நபி பெருமான் (ஸல்) அவர்களும் உணர்ச்சிவசப்பட்டு அழுது விட்டார்கள். ''அமைதியாக இருங்கள்! உங்களின் இதயங்களை அதிகமாகக் குழப்பிக் கொள்ள வேண்டாம்! என்னை நீராட்டி, நான் கூறியவாறு போர்த்தியபின், ஒரு மேடையின் மீது வைத்து விட்டு சிறிது நேரத்துக்கு அவ்விடத்தை விட்டும் அகன்று விடுங்கள்! முதலாவதாக வானவர் ஜிப்ரஈலும், அதன் பின் மற்ற வானவர்களும் வரிசையாகத் தொழுவர். அதன் பின் மற்ற மனிதர்களின் முறை. அதில் முதலில் என் குடும்பத்தைச்

சேர்ந்த ஆண்கள், அதன்பின் அவர்களில் பெண்கள். அதன் பின் மற்றவர்கள் வரிசையாக நின்று தொழவும், ஆனால் எவரும் கூக்குரலிட்டு அழாதீர்கள்!'' என்று கூறிய நபி பெருமான் (ஸல்) அவர்கள் மண்ணறையில் அவர்களை அடக்கம் செய்வது யார் என்ற கேள்விக்கு, ''என்னுடைய நெருங்கிய உறவினர்கள்'' என்று பதில் கூறினார்கள்.

அப்போது ஒருவர் எழுந்து புன்முறுவலோடு அவர்களை நோக்கி, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! ஒரு நாள் நான் என் மேலாடையைக் களைந்திருக்கும் போது தாங்கள் என் முதுகின் மீது தட்டினீர்கள். அதற்கு இப்போது நான் பழி தீர்த்துக் கொள்ள விரும்புகிறேன்'' என்று கூறினார். தங்களின் தோழரின் இந்த அற்புதமான குற்றச்சாட்டைக் கேட்ட நபி பெருமான் (ஸல்) அவர்களின் முகத்தில் நகையானது இழைந்தோடியது. ''நல்லது, ஆனால் எல்லோருக்கும் முன்பாக என் உடலைத் திறக்க நான் கூச்சமடைகிறேன். எனவே நீர் என் அறைக்கு வந்து உம் பழியைத் தீர்த்துக் கொள்வீராக'' என்று கூறி அவ்வாறே அவரை அழைத்துச் சென்று தங்களின் முதுகினைத் திறந்து காட்டினார்கள். அந்தத் தோழரோ பாய்ந்து சென்று அவர்களின் இரண்டு புயங்களுக்கும் நடுவே ஒரு முட்டையின் வடிவில் சதையால் ஆகியிருந்த இறுதி நபியின் அடையாள முத்திரையை முத்தமிட்டவராக முன்னே வந்து, அவர்களின் முன் பணிந்து நின்று, ''பெருமானே! தங்களின் அத்திரு முத்திரையை முத்தமிட வேண்டும் என்ற ஆசையால் பகிரங்கமாக ஒரு பொய்யான குற்றச்சாட்டைத் தங்களிடம் கூறிவிட்டேன். என்னை மன்னித்தருள்வீர்களாக'' என்று வேண்டி நின்றார். புன்னகையோடு அவரைப் பார்த்த நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் ''உக்காஸா! நீர் செல்வீராக! நரகின் வாசல்கள் உமக்கு அடைக்கப்பட்டு விட்டன'' என்றார்கள். அதன் பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள் இல்லம் திரும்பினார்கள். அதுவே அவர்களின் இறுதிப் பேருரையாக இருந்தது.

மற்றொரு சமயம் நபி பெருமான் (ஸல்) அவர்கள் மக்ரிப் அல்லது இஷாவுடைய நேரத்தில் பள்ளியினுள் வந்தார்கள். தொழுகை நடந்து கொண்டிருந்தது. ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் இரண்டாம் ரக்அத்தில் திருமறை வசனங்களை ஓதிக் கொண்டிருந்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் வருவதைக் கண்ட ஸஹாபாக்கள் அவர்கள் வருவதை முன்னிற்கும் ஹழ்ல ரத் அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு மகிழ்ச்சி. மொழிகளால் தெரி வித்தவாறே அவர்கள் முன் செல்வதற்காக வரிசைகளைப் பிளந்து வழி விட்டனர். ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்களும் குறிப்புணர்ந்து பின்னுக்கு வர அடியெடுத்து வைத்தார்கள். அதற்குள் அங்கு வந்துவிட்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களின் முதுகில் கையை வைத்து, அருகில் அமர்ந்தவர்களாக ஹழ்லரது அபூபக்கர் (ரலி) எங்கே நிறுத்தி னார்களோ அங்கிருந்து ஓதி தொழுகையை முடித்தார்கள். இப் போது ஸஹாபாக்களுக்கிடையில் ஓர் ஆனந்த நிலை ஏற்பட் டது. நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஸஹாபாக்களை நோக்கி தொழுகையின் ஊடே அவ்வாறு மகிழ்ச்சிக் குரல் எழுப்ப வேண்டாமென்றும், முன்னிற்கும் இமாமுக்கு ஏதேனும் குறிப் புணர்த்த வேண்டுமானால் 'ஸுப்ஹானல்லாஹ்' என்று குரல் கொடுக்கும்படியும் போதித்தார்கள். அதன் பின் தங்களின் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி தாங்கள் வரக் கண்டால் அவர்கள் பின் வர முயற்சிப்பதேன் என்று கேட்ட போது, ஸித்தீக்குல் அக்பர் அவர்கள், ''அல்லாஹ்வின் தூதருக்கு முன்னால் நிற்க அபூ குஹாஃபாவின் மகன் துணிவு பெறவில் லை'' என்று அடக்கத்துடன் பதில் தந்தார்கள்.

வாழ்நாளின் கடைசி வியாழக்கிழமை காய்ச்சலின் சூடா னது அதிகம் இருந்தது.

உமர் (ரலி) அவர்களும் மற்ற தோழர்களும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் இல்லத்தில் கூடியிருந்தனர். நபியவர்

கவோ நோயின் வேதனையின் ஊடே பகுதியளவே திறந்த தங்க ளின் கண்களால் யாரையோ தேடுகின்றனர். ஆம், அவர்களின் அந்தத் தோழர் அங்கே இல்லை. நபி பெருமான் (ஸல்) அவர்க ளின் உடல் நிலை மோசமடைந்தபோது ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் எம்பெருமான் (ஸல்) அவர்களின் அருகில் தொடர்ந்து இருந்து பணியாற்றவே விரும்பினர். ஆனால் அல் லாஹ்வின் தூதரவர்கள் "அபா பக்கரே! உம்முடைய பணிவி டைக்கான கூலியும் நன்மையும் உம் எண்ணத்தின் பேரிலேயே உமக்குக் கிடைக்கும். ஆனால் இப்போது என் குடும்பத்தார் எனக்குப் பணிவிடை செய்யத் தவறுவார்களாயின் அல்லாஹ் வின் பிடியில் அவர்கள் சிக்குண்டு விடுவார்கள். எனக்குப் பணி விடை புரிய இதுவே அவர்களுக்குக் கிடைத்த ஒரு வாய்ப்பா கும். எனவே அவர்களின் கடமையை நிறைவேற்ற அவர்க ளுக்கு நீர் வாய்ப்பளிப்பீராக. உம் உணர்ச்சிகளை நான் மதிக்கி றேன். அல்லாஹ் அதற்கான கூலியை நிச்சயம் உமக்குத் தரு வான்" என்று கூறி அவர்களின் குடும்பத்தளவில் அவர்களை அனுப்பி இருந்தார்கள்.

"ஆயிஷா! உம் தந்தையையும், சகோதரரையும் விரைந்து வரச் சொல்வீராக" என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூற உடனே ஆளனுப்பப்பட்டது. அதன் பின் அங்கிருந்தவர்களை நோக்கி, "எழுதுகோலையும் மைக்கூட்டையும் கொண்டு வாருங்கள். உங்களைக் குழப்பத்திலிருந்து பாதுகாக்கக் கூடிய சில விஷயங்களை நான் எழுதுவித்து விடுகிறேன்" என்றார்கள். அதன் பேரில் செயலாற்ற சில தோழர்கள் முயற்சித்தபோது, வேறு சில தோழர்கள் நபி பெருமான் (ஸல்) அவர்கள் நோயின் வேதனையால் சங்கடப்பட்டுக் கொண்டிருக்கையில் இத்தகைய சிரமம் தருவதை விரும்பவில்லை. ஹழ்லரத் உமர் (ரலி) அவர்க ளும், "நமக்கிடையே அல்லாஹ்வின் திருவேதம் இருக்கிறது. எனவே நபியவர்களுக்கு இத்தருணத்தில் சிரமம் தர வேண்டாம்" என்றனர். இரு சாராரின் சர்ச்சைக்கிடையில் ஒரு

வர் சினமடைந்தவராக, "நீங்கள் என்ன பெருமானார் (ஸல்) நோயின் வேதனையால் தடுமாறுகிறார்கள் என்றா எண்ணுகிறீர் கள்? வாருங்கள். அவர்களிடமே மீண்டும் கேட்போம்" என் றார். மறுமுறை நபி பெருமான் (ஸல்) அவர்களிடம் கேட்ட போது, "நீங்கள் விரும்பவில்லையானால், என்னை விட்டு விடுங்கள். நீங்கள் அழைப்பதை விட மேலான நிலையில் நான் மூழ்கியிருக்கிறேன்" என்று கூறிய நபி பெருமான் (ஸல்) அவர் கள்,

1. இறைவனுக்கு இணை வைக்காதீர்கள். இணை வைக் கும் முஷ்ரிக்குகள் இந்த மண்ணில் இருக்கக் கூடாது.

2. வெளிநாட்டுத் தூதுவர்களை நான் கவனித்ததே போன்று நன்கு கவனியுங்கள்.

3. திருக்குர்ஆனைப் பின்பற்றி நடந்து கொள்ளுங்கள் என்று மூன்று உபதேசங்களை அருளினார்கள்.

பஷ்ர் இப்னு பர்ரா (ரலி) அவர்களின் தாயார் நபி பெரு மான் (ஸல்) அவர்களின் நோயின் கடுமையைக் கண்டு வியப்ப டைந்தனர். அதனை அறிந்த நபி பெருமான் (ஸல்) அவர்கள், "இதற்கான வெகுமதியும் எனக்கு அதிகமாகவே கிடைக்கும்" என்றார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்கள் அவரை நோக்கி, "உம்மு பஷ்ர்! மக்கள் என் நோயைப் பற்றி என்ன பேசிக் கொள் கிறார்கள்?" என்று கேட்டார்கள்.

"மக்கள் தங்களுக்கு 'நுரை ஈரல் நோய்' ஏற்பட்டிருக்கலாம் என்று பேசிக் கொள்கிறார்கள்" என்றனர்.

அது கேட்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் "நுரையீரல் நோய் என்பது ஷைத்தானின் ஒரு குயுக்தி. ஷைத்தான் எனக்கு எவ்விதத் தீங்கும் புரிய இயலாது. ஆனால் கைபரில் உம்மு டைய மகனோடு நான் உட்கொண்டு விட்ட விஷமானது அடிக்

கடி எனக்கு தொல்லை கொடுத்து வந்தது. அதன் தீவிரம் இப் போது தலை தூக்கி நிற்கிறது'' என்றார்கள்.

அதன்பின் நபி பெருமான் (ஸல்) அவர்கள் மயக்க மடைந்து விட்டார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களின் குடும்பத்தார்களும் கூட நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு இது நுரை ஈரல் நோய் தொல்லையே என்று கருதி வந்தனர். ஒரு மருந்து தயாரித்து நபி பெருமான் (ஸல்) அவர்களை அருந்தும்ப டியாகவும் கூறி வந்தனர். ஆனால் அல்லாஹ்வின் திருத் தூதர் (ஸல்) அவர்கள் இது 'பொறுமை' என்ற மருந்தின் மூலம் குண மாகி அல்லாஹ்வின் அருள் நிறைந்த சந்திப்பைப் பெற்றுத் தரக் கூடிய அருள் நோய் என்பதனை அறிந்திருந்தபடியால் மருந்தை அவர்கள் அருந்த மறுத்து வந்தார்கள். அன்று அவர்களின் அதிக மான வேதனையைக் கண்ட குடும்பத்தார் நபி பெருமான் (ஸல்) அவர்கள் மயக்கமுற்ற நிலையில் இருக்கையில் அவர்களின் சம் மதமின்றியே அவர்களின் திருவாயைத் திறந்து அம்மருந்தினை உட்செலுத்தி விட்டனர். அப்போது அங்கிருந்த ஹழ்லரத் அப் பாஸ் (ரலி) அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று தடுத்தும் அவர்கள் கேட்கவில்லை. பின்னர் உணர்வடைந்த நபி கள் பெருமான் (ஸல்) அவர்கள், 'நான் உண்ண மறுத்தும் மருந் தினை ஏன் என்னுள் செலுத்தினீர்கள்?' என்று வினவினார்கள். அவர்களின் சிரமத்தைக் காணச் சகிக்காமல் தாங்கள் அவ்வாறு செய்ததாக அங்கிருந்தோர் கூறியபோது, 'நுரை ஈரல் நோய் அல் லாஹ் என் மீது அனுப்பாத ஒன்று. என் அனுமதியின்றி நீங்கள் மருந்தை என்னுள் செலுத்தியதால், அந்நோய் உங்கள் அனைவர் மீதும் இறங்கும். எனவே அதே மருந்தினை இப்போது நீங்கள் யாவரும் உண்டு விடுங்கள் - என் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களைத் தவிர. ஏனெனில் அவர் உங்களைத் தடுத்ததை நான் கேட்டுக் கொண்டிருந்தேன்'' என்றார்கள். அதன் பேரில் அங்கி ருந்த அனைவரும் அம்மருந்தினை உட்கொண்டார்கள். அன் றைய தினம் நோன்புடன் இருந்த அன்னை மைமூனா (ரலி)

அவர்களும் கூட நோன்பை முறித்து மருந்துட் கொள்ள வேண்டியதாயிற்று.

அந்நிகழ்ச்சியைப் பற்றி ஹழ்லரத் முஹயித்தீன் இப்னுல் அரபி அவர்கள், அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்திலும் தங்களின் குடும்பத்தார் தங்கள் பொருட்டு குற்றத்திற்காளாகி விடக் கூடாதென்பதில் அக்கறை கொண்டே இவ்வாறு பிரதி செய்து கொண்டதாக எழுதுகிறார்கள்.

இவ்வாறாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் நோய் தீர்க்க எவ்விதமான மருந்துகளையும் உட்கொள்ளாதது மட்டுமின்றி நோய் நீங்க வேண்டும் என்று ஒரு பிரார்த்தனையுங் கூட செய்தார்களிலர். வழக்கமாக, 'இறைவா! உன்னிடத்தில் மன்னிப்பையும் சுகத்தையும் தேடுகிறேன்' என்று பிரார்த்திக்கக் கூடிய அவர்கள் இப்போது தங்களின் ஆன்மாவை நோக்கி, 'ஏ ஆன்மாவே! உனக்கென்ன வந்தது? நீ எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பாதுகாப்புத் தேடுகிறாயே' என்று கூறிக் கொண்டார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்களின் அருகில் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அமர்ந்திருந்தனர். பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களுக்கு உடலில் ஏதேனும் வருத்தம் ஏற்படும்போதெல்லாம்,

اَللّٰهُمَّ اِذْهَبِ الْبَاْسَ ، رَبَّ النَّاسِ اِشْفِهِ وَاَنْتَ
الشَّافِيْ لَاشِفَاءَ اِلَّا شِفَاءُكَ شِفَاءً لَّا يُغَادِرُ سَقْمًا

"மனிதர்களின் இறைவனே! நோயினை விலக்கி சுகத்தினைத் தந்தருள். நீயே சுகந்தருபவன். நீ தரும் சுகமேயன்றி வேறு சுகமேயில்லை. எவ்விதச் சிரமமும் எஞ்சியிராதவாறு சுகத்தைத்

தந்தருள்' என்று ஓதி தங்களின் கரங்களில் ஊதி உடல் முழுவதும் தடவிக் கொள்ளும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். அன்று ஆயிஷா (ரலி) அவர்கள் அப்பிரார்த்தனையை ஓதி நபி பெருமான் (ஸல்) அவர்களின் கரங்களில் ஊதி அவர்களின் திரு மேனியில் தடவி விட முயன்றபோது தங்களின் திருக்கரங்களை விலக்கிக் கொண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''என் இறைவா! என் பிழைகளைப் பொறுத்து மேலான தோழர்களி டம் என்னைச் சேர்த்தருள்'' என்று பிரார்த்தித்ததாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்களே கூறுகிறார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்கள் தீவிரமாக நோயுற்றிருக் கும் செய்தி ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர்களின் தலைமையில் ஸிரியா நோக்கி புறப்பட்டுக் கொண்டிருந்த படையினருக்கு எட்டியது. மதீனாவை அடுத்திருந்த 'அல்ஜுர்ஃப்' என்ற தளத் தில் அவர்கள் பாளையமிறங்கி விட்டனர். பெருமானார் (ஸல்) அவர்களைக் காண வந்த ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர்கள் சற்றே குனிந்து தங்களின் வளர்ப்புப் பாட்டனார் - தங்களின் தலைமுறைக்கே வாழ்வளித்த இரட்சகர் (ஸல்) அவர்களின் தகிக்கும் நெற்றியில் முத்தமிட்டனர். சற்றே கண் திறந்த நபி பெருமானார் (ஸல்) அவர்கள் ஹழ்லரத் உஸாமா (ரலி) அவர் களை அடையாளம் கண்டு கொண்டவர்களாக அவர்களின் இளம் சிரசின் மீது கை வைத்து ஆசீர்வதித்தார்கள்.

நாட்டின் அதிகாரத்தைத் தங்கள் கையிலே பிடித்தி ருந்த மாமன்னரின் அந்தரங்க வாழ்க்கை உள்ளத்தை சில்லிடச் செய்கிறது. ஞாயிற்றுக்கிழமை அன்று பகலில் ஏறத்தாழ நாற் பது அடிமைகளை நபி பெருமான் (ஸல்) அவர்கள் அவர்களின் அடிமைத் தளைகளிலிருந்து விடுதலை செய்தார்கள். ஞாயிறு கழிந்த திங்கள் இரவு வாழ்வின் கடைசி இரவாகும். நபி பெரு மான் (ஸல்) அவர்களோ அடிக்கடி மூர்ச்சையாகிக் கொண்டிருந் தார்கள். எண்ணெய் இல்லாத காரணத்தால் விளக்கானது

அணைந்து விட்டது. மனிதர்களின் உடல்களை மட்டும் அன்றி அவர்களின் ஆன்மாக்களை அடக்கி ஆண்ட உலக நாயகரின் திரு வீட்டில் அன்று எண்ணெய் இல்லாததால் ஆயிஷா நாயகி யார் ஒரு தோழரிடத்தில் விளக்கைத் தந்து 'மற்ற மனைவிமார்க ளில் யார் வீட்டிலேனும் சிறிதேனும் எண்ணெய் இருக்கும். வாங்கி வாருங்கள்' என்றனுப்பி வைத்தனர். நபி பெருமானவர்க ளுக்குச் சில தீனார்கள் அன்பளிப்பாக வந்திருந்தன. அவை ஏழைகளுக்கு அறம் செய்யப்பட்டிருந்தன. இன்னும் ஏழு தீனார் கள் எஞ்சியிருக்கும் விபரமறிந்து நபி பெருமான் (ஸல்) அவர் கள் ஆயிஷா (ரலி) இடம் அவற்றையும் அறம் செய்து விடக் கூறினார்கள். ஆகட்டும் என்றனர் அன்னையவர்கள்; அதற்குள் நபி பெருமான் (ஸல்) அவர்கள் மயக்கமடையவே தங்கள் கண வரைக் கவனிக்கும் கவலையில் அதனை மறந்து விட்டனர். தெளிவடைந்த நபிகள் பெருமான் (ஸல்) திர்ஹங்களைப் பற் றிக் கேட்டார்கள்; அன்னையவர்கள் தாங்கள் மறந்து விட்ட செய்தியைக் கூறியபோது, உடனே தர்மம் செய்யக் கூறினார்கள்; உடனே மீண்டும் மூர்ச்சையானார்கள். இம்முறையும் அன்னை யாரவர்கள் மறந்து விட்டார்கள். மூன்றாம் முறை மயக்கம் தெளிந்ததும், நபி பெருமானார் (ஸல்) அவர்கள், "ஆயிஷா! அந்த தீனார்கள் எங்கே?" என்று கேட்டார்கள். "நாயகமே! இதோ கொண்டு வருகிறேன்" என்று கூறியவர்களாக அன்னை யார் அவர்கள் நபி மணியின் முன்னே அவற்றை கொணர்ந்து வைத்தார்கள். "ஆயிஷா! முஹம்மத் தன்னுடைய வீட்டில் தங் கத்தை வைத்துக் கொண்டு தன் இறைவனைச் சந்திக்க வேண்டு மென நீ நினைக்கிறாயா? தங்கத்தை வீட்டிலே வைத்து நம்பிக் கையற்றவனாக என் எசமானனைச் சந்திப்பது எனக்கு அழகாகத் தெரியவில்லை" என்று கூறி அவற்றை தர்மம் செய்து விடும்படி அண்ணலார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் கூறினார் கள்; அவ்வாறே செய்யப்பட்டபின், "இப்போதுதான் என் உள் ளம் அமைதியடைந்து உள்ளது" என்று கூறி நிம்மதி கொண்டார் கள்.

திங்கட்கிழமை அதிகாலையில் நபி பெருமான் (ஸல்) அவர்கள் தங்கள் இல்லத்துக்கும் பள்ளிக்கும் இடையே தொங்கிக் கொண்டிருந்த திரையை விலக்கிப் பார்த்தார்கள். காலைத் தொழுகையானது நடந்து கொண்டிருந்தது. தானைத் தளபதியாய் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் முன்னிற்க, பாசறையின் படை வீரர்கள் அணி அணியாய்ப் பின்னிற்க, தவ்ஹீதின் சுடர் வீசும் ஜோதியானது குஃபிரின் அந்தகாரத்தைக் கிழித்து ஒளிவீசி பரிணமித்ததை அவர்களின் கண்கள் கண்டன. 'இப் படை தோற்கின் பின் எப்படைதான் வெல்லும்?'' என்று கேட்பது போல் இயங்கிய அப்படையணி கண்டு அண்ணலார் (ஸல்) அகமகிழ்ந்தார்கள். கல்லடியும் சொல்லடியும் தாங்கி, தங்களின் காலத்தையெல்லாம் காணிக்கையாக்கி வைத்து, தாங்கள் ஏற்றி வைத்த மணிவிளக்கு இனி மாநிலம் உள்ளளவும் சுடர் பரப்பும் என்ற பூரண நம்பிக்கை நபி பெருமான் (ஸல்) அவர்களின் உள்ளத்தைக் களிபேருவகை கொள்ளச் செய்தது. பூரண மதியின் பேரழகைப் பழித்திடும் அவர்களின் திருமுகம் திறந்து வைக்கப் பட்டத் திருமறையைப் போல் மலர்ந்தது.

தங்களின் தாளாளர் வரப் போகிறார்கள் என்ற எண்ண மேலீட்டால் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் சற்றே பின் வாங்க முனைந்தார்கள். இதற்குள் நபி பெருமான் (ஸல்) அவர்கள் வேண்டாம் என்று சைக்கினை செய்து திரையை விட்டு விட்டார்கள்.

அதுவே பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் வாழ்நாளில் கண்ட இறுதித் தொழுகையாகும். பொழுது புலர்ந்த போது பெருமானார் (ஸல்) அவர்களின் அருமைத் திருமகளார் ஃபாத்திமா (ரலி) அவர்கள் தங்கள் இரு கண்மணிகளான ஹஸன், ஹுஸைன் (ரலி) ஆகியோருடன் தந்தையின் இல்லம் வந்தனர். பரிவுள்ள தந்தையாக மட்டுமின்றி, பாசம் நிறைந்த ஒரு தாயாகவும் இருந்து, தம்மை வளர்த்து, பெண்ணினத்தின் பெரும் பய

ளாய்ப் பேரறிவின் நிலைக்களனாய்த் தம்மை ஆக்கி வைத்த அந்த ஆசான் தாலாட்டும் மரணத்தின் மடியில் தங்களின் இரு கண்களை மூடியவாறு படுத்திருக்கக் கண்டபோது 'காத்துனெ ஜன்னத்'தின் நெஞ்சம் வெடித்தது. ''அந்தோ என் தந்தையின் சிரமமே'' என்ற 'ஜொஹ்ராபுதூலின்' குரல் கேட்டு கண் திறந்த பெருமானார் (ஸல்) அவர்கள், ''ஃபாத்திமா! இதற்குப் பின் உன் தந்தைக்கு இனி எப்போதும் சிரமம் என்பதில்லை'' என்று கூறியவர்களாகத் தங்களின் ஆருயிர் மகளை அருகேயழைத்து, அன்போடு முகர்ந்தார்கள். அதன் பின் ஃபாத்திமா (ரலி) அவர்களை நெஞ்சோடணைத்து அவர்களின் காதுகளில் இரகசியமாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஏதோ சொன்னார்கள். அதைக் கேட்டதுமே ஃபாத்திமா நாயகியார் 'கோ'வெனக் கதறி விட்டார்கள். அருகிலிருந்த ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று கண்டித்தனர். அப்போதும் பெருமானார் (ஸல்) அவர்கள் அவர்களை நோக்கி ''வேண்டாம் அபல் ஹஸன்! இறந்து கொண்டிருக்கும் தன் தந்தைக்காக ஃபாத்திமாவை சிறிது கண்ணீர் வடிக்க விடுங்கள்'' என்று கூறினார்கள்.

பரிவு நிறைந்த அந்தத் தந்தையையும் பாசம் நிறைந்த அந்த மகளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்! அவர்களின் கண்களும்தான் அழுகின்றன. ஆகா! இந்தத் திருமகளின் மீது அல்லாஹ்வின் திருத்தூதர் கொண்டிருந்த அன்புதான் என்னே! எந்த அலுவலிலே நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஈடுபட்டிருந்தாலும் சரி அருமை மகளார் ஃபாத்திமா தங்களை நாடி வந்தார்களேயானால், ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் எழுந்து முன் சென்றல்லவா வரவேற்பார்கள்; செஞ்சோடணைத்து உச்சி முகர்வார்கள்; அருகே அமர்த்தி அளவளாவுவார்கள். அன்னை ஃபாத்திமா (ரலி) அவர்களின் வீட்டைத் தேடி நபி பெருமான் (ஸல்) அவர்

கள் சென்றார்களேயானால் அங்கேதான் என்ன - இதற்குக் குறை வாகவா இருக்கும்? அன்பு நிறைந்த தந்தை என்ற உறவுக்கு மேலாக அல்லாஹ்வின் ரஸூல் என்ற அச்சமும் கண்ணியமு மல்லவா அங்கு ஆதிக்கம் கொண்டிலங்கும். அத்தகைய அருமை மகளின் கண்ணீரை நபி பெருமான் (ஸல்) அவர்களின் நெஞ்சம் எங்ஙனம் தாங்கும்? மீண்டும் தங்கள் மகளாரை அழைத்து அவர்களின் காதுகளில் மறுமுறையும் ஏதோ இரகசிய மாகக் கூறினார்கள். அப்போது ஹழ்லரத் ஃபாத்திமாவின் கண் கள் நீரைச் சொரிந்து கொண்டிருப்பினும் முகமோ தாமரையாய் மலர்ந்தது. அதையும்தான் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் காண்கிறார்கள்.

துக்கமானது கண்ணீரைக் கொப்பளிக்கும். மகிழ்ச்சியானது வதனத்தை மலரச் செய்யும். ஆனால் கண்ணீரும் களிப்பும் ஒன் றிணைந்து வெளிப்படுவதை அன்னை ஆயிஷா (ரலி) அன்று தான் புதினமாகக் கண்டார்கள். தனியே மகளை அழைத்து, ''ஃபாத்திமா! மகளே! மகிழ்ச்சியால் முகம் மலருவதை நான் கண்டிருக்கிறேன். துக்கத்தால் கண்கள் கண்ணீர் வடிப்பதையும் கண்டிருக்கிறேன். ஆனால் மலர்ச்சியும் கண்ணீரும் ஒரே நேரத் தில் வெளிப்படுவதை இன்றுதான் நான் உன் முகத்தில் காண்கி றேன். இது என்ன காரணம்? இந்தப் புதினத்தை எனக்குப் புரியச் செய்' என்று கேட்டார்கள். ஆனால் ஃபாத்திமா நாயகியோ, ''தாயே! என் தந்தையின் இரகசியத்தை அவர்கள் இருக்கும் போதே நான் எவ்வாறு உடைக்க முடியும்?'' என்று கூறி மறுத்து விட்டார்கள். பின்பொரு சமயம் அதனை ஆயிஷா நாயகியார் விசாரித்தபோது ஃபாத்திமா (ரலி) அவர்கள் முதலாவதாக நபி பெருமான் (ஸல்) அவர்கள் என்னிடம், ''ஃபாத்திமா! இன் றைய தினம் நான் மரணமடைவேன்'' என்று கூறினார்கள். அது கேட்டு நான் துடித்தேன். மறுமுறை என்னை அழைத்து, 'ஃபாத்

திமா! என் குடும்பத்தில் எல்லோருக்கும் முதலாவதாக நீயே என்னிடம் வந்து சேருவாய்'' என்று கூறியதோடு, ''சுவனத்தின் பெண்களுக்கு நீ தலைவியாக இருப்பாய்'' என்று கூறினார்கள். அதுகேட்டு நான் மகிழ்ந்தேன் என்று அறிவித்தார்கள்.

அதன் பின் தங்களின் நெஞ்சத் தடத்தில் கொஞ்சி விளையாடிய சுவனத் தாமரைகளான ஹஸன், ஹுஸைன் (ரலி) இருவரையும் அருகழைத்தார்கள். ஹஸன் அவர்களோ, ''அருமைப் பாட்டனாரவர்களே! உங்களின் பிரிவை நாங்கள் எவ்விதம் தாங்க இயலும்? என் மீதும் என் இளவலின் மீதும் என் தந்தையின் மீதும் தாயின் மீதும் உங்களுக்குப் பின் அன்பு செலுத்துபவர் யார்? உங்களின் மனைவிமார்களை யார் கவனிப்பர்?'' என்று கேட்டழுதனர். அதனைக் கேட்ட அன்னையார் அனைவருமே அழுதனர். பெருமானார் (ஸல்) அவர்களுமே பெரிதும் உணர்ச்சிவசப்பட்டார்கள். அதன்பின் இருவரையும் அணைத்து முத்தமிட்டார்கள்.

பின்னர் ஓய்ந்த தங்கள் கரத்தை அலீ (ரலி) அவர்களின் மடி மீது வைத்தவர்களாக, ''உஸாமா இப்னு ஜ்ஸைத் உடைய தலைமையின் கீழ் ஸிரியாவுக்கு அனுப்பப்பட்ட படைச்செலவுக்காக நான் வாங்கியுள்ள கடனை உம்முடைய பொருள்களிலிருந்து கொடுத்து விடுவீராக. அபல் ஹசன்! என் மரணத்துக்குப் பின்னால் பல்வேறு சோதனைகளையும் துன்பங்களையும் நீர் சந்திப்பீர். பொறுமையோடு அவற்றைத் தாங்கிக் கொள்வீராக. உலகாயத நன்மைகளுக்கு ஆசைப்படுவதற்கு மாறாக இறையருள் பெற்ற மறுமை பேற்றைத் தேடிக் கொள்வீராக'' என்று கூறினார்கள். அதன்பின் தங்களின் குரலைச் சற்றே உயர்த்தியவர்களாக, 'தொழுகை! தொழுகையைக் கடைப்பிடியுங்கள், அடிமைகள்! அடிமைகளை நல்லபடி நடத்துங்கள்'' என்று எச்சரித்தார்கள்.

பின்னர் நெருங்கிய தோழர்களின் ஒரு குழு மீண்டும் அவர்களைக் காண வந்தது. அவர்களை நோக்கிப் பெருமானார் (ஸல்) அவர்கள், ''சமுதாயத்தில் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் நீங்கள். உலக மக்களில் நீங்களே மேலானவர்கள். இறைவனின் ஏகத்துவத்தில் கொண்டுள்ள நம்பிக்கையில் நீங்கள் உறுதியோடிருங்கள். திருக்குர்ஆனை உங்களுக்கு வழிகாட்டும் ஒளிவிளக்காக் கிக் கொள்ளுங்கள். இஸ்லாத்தின் புனித கொள்கைகளைப் பின் பற்றி நடங்கள்'' என்று கூறியவர்களாக ''யா அல்லாஹ்! நான் என் தூதை முடித்துக் கொண்டேன்'' என்று கூறித் தங்களிரு கண்களையும் மூடிக் கொண்டார்கள்.

அலீ (ரலி) அவர்களின் சாடையைக் கண்டு தோழர்கள் யாவரும் வெளியில் சென்றனர். பின்னர் நபி பெருமான் (ஸல்) அவர்களின் வீட்டுப் பெண்கள் உள்ளே வந்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்களின் இறுதி நேரமானது அமைதியுடன் அண்மிக் கொண்டிருந்தது. இறுதியாகத் தங்களுக்கு நல்லுபதேசம் புரியும்படியாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்டுக் கொண்டபோது ''பெண்களின் மீது அல்லாஹ் விதித்துள்ள நியதிப்படி நீங்கள் உங்களின் வீடுகளில் தங்கியிருங்கள்'' என்று நல்லுரை நவின்றார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்களின் கண்கள் இப்போது நீரைச் சிந்தின. அருகிலிருந்த அன்னை உம்மு ஸலமா (ரலி) அவர்கள் ''அல்லாஹ்வின் ரஸூலே தங்களின் முன் பின் பாவங்கள் அனைத்தையும் அல்லாஹ் மன்னித்திருக்க தாங்கள் எதற்காக அழ வேண்டும்?'' என்று கேட்டபோது பெருமானார் (ஸல்) அவர்கள், ''என் மக்களின் நினைவு கண்ணீரைப் பெருக்கெடுக்கச் செய்கிறது'' என்றார்கள்.

அச்சமயம் ''அஸ்ஸலாமு அலைக்கும் யா ரஸூலல் லாஹ்!'' என்ற குரலானது வாசலின் புறமிருந்து கேட்டது. அனைவரின் கண்களும் குரல் வந்த திசை நோக்கித் திரும்பின. தூய்மையாக

ஆடையணிந்த அரபி இளைஞர் ஒருவர் தோற்றமளித்தார். அதற்கு முன்பு ஒருவருமே கண்டிராத அப்புதியவரின் வரவு எல்லோருக்குமே எரிச்சலூட்டியது. சிரமம் மிக்க அத்தருணத் தில் நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு மேலும் சிரமம் தரக் கூடாதென்ற எண்ணத்தில், ஆயிஷா நாயகியார் அவர்கள் 'இப் போது அவர் உள்ளே வரவேண்டாம்' என்று அருகிலிருந்தவர்க ளிடம் கூறியனுப்பினார். ஆனால் அதற்குள் கண் விழித்த நபி பெருமான் (ஸல்) அவர்கள் ''ஆயிஷா! ஸலாம் கூறினவர் யார் என்பதை நீ அறிவாயா?' என்று கேட்டார்கள்.

''அவர்தாம் மனிதர்களை இன்ப நிலையை விட்டும் துன்ப நிலையிலாக்குகின்றவர்; மனிதர்களின் ஆசைகளை அழிக்கின்ற வர்; பெண்களை விதவைகளாக்குகின்றவர்; பிள்ளைகளை அநாதைகளாக்குகின்றவர்; 'மலக்குல் மவ்த்' எனப்படும் உயிர் வாங்கும் வானவர் அவரே. எவருடைய உத்தரவுக்காகவும் எப் போதும் தம் கடமையைச் செய்யத் தாமதித்துக் காத்திருந்தவரு மல்லர் அவர்; இனி காத்திருப்பவருமல்லர்; ஆனால் இன்று என் இறைவனின் ஆணைப்படி என் வீட்டினுள் வர என் உத்தரவை நாடி நிற்கிறார். என் அருகில் வர விடுங்கள் அவரை'' என்று கட்டளையிட்டார்கள்.

அதற்குள் அன்றாடம் அவர்களிடம் வந்து உடல் நிலை அறிந்து செல்லும் ஹழ்லரத் ஜிப்ராயீல் (அலை) அவர்களும் வந்து விட்டார்கள். இரண்டு வானவர்களும் நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறி அருகே நின்றனர். நபி பெரு மான் (ஸல்) அவர்களை நோக்கி ஹழ்லரத் ஜிப்ராயீல் (அலை), 'அல்லாஹ்வின் திருத் தூதரே! இறை செய்தியை எத்தி வைக்கும் தூதனாக உலகில் நான் வருவது இதுவே கடைசித் தருணமா கும். தங்களின் மேலான உலக வாழ்வும் இன்று நிறைவு பெற்று விடும். இதற்குப் பின்னால் எவருக்கும் இறை செய்தியை நான்

கொண்டு வரப் போவதுமில்லை. எவருடைய மரணத்திற்காக வும் நான் வரப் போவதுமில்லை" என்றுரைத்தனர்.

பின்னர், ஹழ்ரத் இஸ்ராஈல் (அலை) அவர்கள், "அல்லாஹ்வின் ரஸூலே! இறைவனின் ஆணையை ஏந்தி உங்கள் முன் வந்திருக்கிறேன். தாங்கள் உலகில் இருக்க விரும்புகிறீர்களா அல்லது தங்களின் இறைவனைச் சந்திக்க விரும்புகிறீர்களா என்று கேட்கும்படி எனக்கு உத்தரவாகியுள்ளது" என்று கூறி நின்றனர்.

நபிபெருமான் (ஸல்) அவர்கள், "இஸ்ராஈலே! என் இறைவனுக்கு எது விருப்பமோ அதுவே என் விருப்பமாகும். அல்லாஹ்வின் ஆணையை நிறைவேற்றுவதில் காலங்கடத்தாதீர்" என்று பதில் கூறினார்கள்.

'ஸக்ராத்' என்னும் மரணவேதனையானது துவங்கியது. அறுபத்து மூன்று ஆண்டுகளைக் கடந்திருந்த அல்லாஹ்வின் அருமைத் தூதர் (ஸல்) அவர்கள் இருபத்து மூன்றே வயதுடைய தங்களின் இதயக்கனி மலரான ஆயிஷா நாயகியின் நெஞ்சில் சாய்ந்திருந்தார்கள். தங்களின் திருக்கரத்தை அருகில் ஒரு தோல் பையிலிருந்த தண்ணீரில் முக்கியெடுத்து தங்களின் முகத்தில் தடவிக் கொண்டவர்களாக, "வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர்த்து வேறில்லை. நிச்சயமாக மரணமானது வேதனையுடையதே. யா அல்லாஹ்! உன் உதவியை நான் வேண்டுகிறேன்" என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

"எவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தானோ அவர்களுடன்"

"அல்லாஹ்வாகிய உயர்ந்த தோழனுடன்" என்றும் அடிக்கடி கூறிக் கொண்டிருந்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் கரங்களை நீட்டவும் மடக்கவுமாக இருந்தார்கள். அது ரூஹானது வெளிப்படும் வேதனையைக் காட்டுவதாக இருந்தது.

'ஜிப்ரஈலே! என் அருகில் வருவீராக'' என்ற முணுமுணுப்பும் செவிகளில் கேட்டது. அதற்கிடையில் ஆயிஷா (ரலி) அவர்களின் உடன் பிறந்தார் ஹழ்லரத் அப்துர் ரஹ்மான் இப்னு அபூ பக்கர் (ரலி) அவர்கள் வந்தார்கள். அவர்களின் கைகளில் பல் துலக்கும் மிஸ்வாக்கு இருந்தது. நபி பெருமான் (ஸல்) அவர்கள் பார்வை அதன் மீது செல்வதைக் கண்ட ஆயிஷா (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் மிஸ்வாக்குச் செய்ய விரும்புகிறார்கள் என்பதை அறிந்து தங்களின் சகோதரரின் கையிலிருந்து அதனை வாங்கி, மென்று மிருதுவாக்கி அண்ணலார் (ஸல்) அவர்களின் திருக் கரங்களில் கொடுத்தார்கள். நபி பெருமான் (ஸல்) அவர்கள் அதனை வாங்கிப் பல் துலக்கினார்கள்.

மதியத்துக்குச் சற்று முந்தின நேரமாக இருந்தது. நபி பெருமான் (ஸல்) அவர்களின் வாழ்வில் மூச்சானது எந்நேரமும் அறுந்து விழக் கூடிய நூலின் நிலையில் இழையோடிக் கொண்டிருந்தது. உடல் படிப்படியாகக் கனத்துக் கொண்டும் குளிர்ந்து கொண்டும் இருந்தது. திடீரெனத் தங்களின் திருக் கரங்களை உயர்த்தி ''அல்லாஹ்வாகிய உயர்ந்த தோழனுடன்' என்று தாழ்ந்த குரலில் கூறினார்கள். மறுமுறையும் அவ்வாறே கூறினார்கள். மூன்றாம் முறையும் அவ்வாறே கூறி முடிந்ததும் அவர்களின் பொற்கரம் பக்கத்தில் ஓய்ந்து சாய்ந்தது; திருப்பார்வையானது வானின் பக்கமாக நின்று நிலைத்தது. புனித ஆத்மா உடலை விட்டுப் பிரிந்து சென்றது.

அந்தகார இருள் கவிழ்ந்த அவனியின் கண்களைத் தம் அருளொளிக் கதிர்களால் விழிக்கச் செய்த மெய்ஞ்ஞானப் பரிதி மறைந்தது. பசி தணிக்க வயிற்றினில் கல் கட்டி, பிறர் புசிக்கச்

செய்த வள்ளல் - ஒட்டாடை தாமுடுத்தி, பிறர் மானம் காத்து நின்ற ஏந்தல் - பருங்கயிற்றுக் கட்டிலில் படுத்துறங்கி, பாரு லகை வழி நடத்திய செம்மல் - அன்பெனும் ஆயுதத்தால் அரக் கர்களை மனிதர்களாக்கிய அண்ணல் - பண்பென்னும் குணச் சிறப்பால் இதயங்களை ஈர்த்து நின்ற தென்றல், இறுதியாகத் தங்கள் இறைவனின் தோழமையை தெரிந்தெடுத்தவர்களாக உலகின் எல்லா ஒட்டையும் உறவையும் துறந்து, பந்தத்தையும் பாசத்தையும் மறந்து, உற்றோரையும் மற்றோரையும் பிரிந்து சென்றார்கள்.

ஹிஜ்ரி 11 ஆம் ஆண்டு ரபீஉல் அவ்வல் மாதம் மதீனாவில் வசந்த காலம் பிறந்து விட்டது. அதே மதீனாத் திருநகருக்கு நபி பெருமான் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத்துச் செய்து வருவதற்கு ஐம் பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னாலும் மக்காவில் இதே போன்று வசந்தம் பிறந்தது.

ஆகா! அந்த வசந்தம் பிறந்தபோது அங்கே மக்காவில் மந்த மாருதத் தென்றல் அல்லவா வீசியது! அந்தத் தென்றலின் ஸ்பரி சத்தால் மலர்கள் மலர்ந்தன; மதி வதனங்கள் மலர்ந்தன; மக்க மாநகர மாந்தர்களின் நெஞ்சங்கள் மலர்ந்தன. பலிபீடங்களிலி ருந்து அல்லாஹ்வின் பேரருளால் இருமுறை தப்பி வந்து, அன்னை ஆமினாவின் மணிவயிற்றில் வளர்ந்த 'நூரே முஹம் மத்' அன்று மாநிலம் தழைக்கப் பிறந்த மகிழ்ச்சியால் மண்ணும் மலர்ந்தது, விண்ணும் மலர்ந்தது. ஆனால்!

அறுபத்து மூன்று ஆண்டுகளுக்குப் பின், இன்று வசந்தம் பிறந்தபோது!

வானமும் அழுதது! வையமும் அழுதது; வாழ்வு பெற்ற மங்கையர் அழுதனர்! மாந்தர் தம் நெஞ்சங்கள் அழுதன.

அறுபத்து மூன்றாண்டு
அரு முறையில் வாழ்ந்து நெறி
நிறுவியபின் மறைவதற்கோ
நிலத்துதித்தீர் நாயகமே!

என்று படைப்பினங்கள் ஒவ்வொன்றுமே அழுதன.

மங்காத ஒளி வீசி மனித சமுதாயத்துக்கு வழிகாட்டிய மாநிலத்தின் மணி விளக்கு அணைந்தது. பண்புடைய தம் வாழ்வாலே பாருலகின் நெஞ்சங்களை ஈர்த்து நின்ற புனிதத் திரு மேனி ஓய்ந்தது.

★ ★ ★

நாயகத் திருமேனியவர்களின் நிரந்தரப் பிரிவை நல்லறத் தோழர்களின் நெஞ்சங்கள் எவ்வாறு தாங்கும்? தோழமை என்றாலும் வரலாற்றில் நிகர் காண முடியாத தோழமையல்லவா அது? சாதாரண மனிதர்களில் மட்டுமல்ல, மாபெரும் நபிமார்களுக்கும் கூட அத்தகைய தோழர்கள் அமைந்தவர்களல்லரே!

எதிரிகளோடு போர் புரியுமாறு ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களுக்கு இறைவன் ஆணையிட்டபோது, "நீரும் உம்முடைய இறைவனும் சென்று யுத்தம் புரியுங்கள், நிச்சயமாக நாங்கள் இங்கேயே உட்கார்ந்து கொண்டிருப்போம்" என்று கூறினார்கள் என்று ஹழ்லரத் மூஸா (அலை) அவர்களுக்கமைந்திருந்த தோழர்களை திருமறை (5:24) சுட்டிக் காட்டுகிறது.

சில தங்கக் காசுகளை அடைய ஆசைப்பட்டு தங்களின் நபியையே காட்டிக் கொடுத்த சீடர்களை ஹழ்லரத் ஈஸா (அலை) அவர்களின் வரலாறு நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது.

ஆனால் அல்லாஹ்வின் திருத்தூதர் அஹ்மத் (ஸல்) நபியின் அருமைத் தோழர்கள் ஒளிவீசும் மணிவிளக்கின் சுடரொளியில் தங்களையே சுட்டெரிக்கும் விட்டில்களாக வல்லவா வாழ்ந்தார்கள்! வரலாற்றின் ஏடுகள் இந்த உண்மையைப் பேசுகின்றன. குறைஷிகளின் தலைவரான ஹழ்லரத் உர்வா இப்னு மஸ்ஊத் ஃஸக்கஃபீ (ரலி) அவர்கள் இஸ்லாத்தில் தாங்கள் இணைவதற்கு முன்பாகவே நபி பெருமான் (ஸல்) அவர்களைச் சந்திக்க ஹுதைபியாவுக்கு வந்தார்கள். ஹுதைபியாவில் நபி பெருமான் (ஸல்) அவர்களோடு அளவளாவிக் கொண்டிருக்கையில் முஸ்லிம்களின் நடப்புகளையெல்லாம் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தவர்களாக, மக்கா திரும்பி - நபி பெருமானின் விரோதிகளின் தலைவராக இருந்த நிலையில் - குறைஷிகளின் சபையில்,

''தோழர்களே! கெய்ஸரையும் கிஸ்ராவையும் நான் சந்தித்திருக்கிறேன். நஜ்ஜாஷியையும் நான் பார்த்திருக்கிறேன். அவர்களின் அரச மாளிகைகளின் ஆரவாரங்களையும் நான் கேட்டிருக்கிறேன். அவர்களின் படை வீரர்களின் பராக்கிரமத்தையும் தீரத்தையும் நான் பார்த்திருக்கிறேன், குறைஷிகளே! ஆண்டவனின் மீது சத்தியமாக, முஹம்மதின் (ஸல்) ஆட்சியின் மாட்சியோ வேறு பட்டதாக இருக்கிறது. அவரின் தோழர்களின் நிலைமையோ வர்ணனைகளைக் கடந்ததாக இருக்கின்றது. அவர்களின் தீரமும் தியாக உணர்வும் தனித்தன்மையுடையனாய் இருக்கின்றன. அவர்களின் திரு நபியானவர் காரி உமிழ்ந்தாரேயானால் அவரின் எச்சிலைத் தரையில் விழ அவருடைய தோழர்கள் விடுகின்றார்களிலர். எவ்வாறேனும் ஒரு தோழரின் கரத்தில் அந்த எச்சில் விழுகிறது. அவர் அதனைப் புனிதமாக எண்ணி தம் முகத்திலோ உடலிலோ தடவிக் கொள்கிறார். அவர் ஏதேனும் கட்டளையிடுவாராகில் அக்கட்டளையைத் தாமே முத

லில் நிறைவேற்ற வேண்டும் என்ற ஆவலில் அவர்கள் ஒருவரோடொருவர் முண்டியடித்து முந்துகின்றனர். அந்த நபியானவர் 'ஒழ்லு' செய்தாரேயானால் அந்த ஒழ்லுவின் தண்ணீரைக் கீழே சிந்தவிடாமல் அவர்கள் பாய்ந்து பிடிப்பதைப் பார்க்கும் போது ஒருவருக்கொருவர் வாளேந்தி வெட்டிக் கொள்வார்களோ என்று எண்ண வேண்டியதாக இருக்கிறது! அவர் ஏதேனும் பேசத் துவங்கினால் அவரின் ஆயிரத்து நானூறு தோழர்களும் பதுமைகளைப் போல் அசையாது அமைதியோடு காது கொடுத்து அதனைக் கேட்கிறார்கள். அவர்களில்எவரானாலும் அவரைச் சரிவர நிமிர்ந்து நேராகப் பார்க்கவும் அஞ்சுகிறார். இத்தகைய மரியாதையும் பேணுதலும் அன்பும் உடையவர்கள் - தங்களின் நபியானவர் முகம் கழுவிய தண்ணீரைத் தரையில் சிந்தவிடாத வீரர்கள் - அவர்களின் நபியின் செந்நீரைச் சிந்த உங்களை எங்ஙனம் விடுவார்கள்? அவர்களோடு பொருதுவது எனக்குப் பொருத்தமாகத் தெரியவில்லை'' என்று கூறினார்கள்.

உண்மையிலேயே இறைவன் அத்தகைய தோழர்களையே நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு அருளியிருந்தான். பகல் முழுவதும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் அருகிலேயே அவர்கள் இருப்பார்கள்; இரவின் சில நாழிகைகளே பிரிந்திருக்க அவர்கள் நிம்மதி பெற மாட்டார்கள்; விடிந்தவுடன் முதலில் பள்ளியில் சென்று பெருமானாரை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள்; பெருமானார் (ஸல்) அவர்களின் முதல் பார்வை தங்கள் மீது பட வேண்டுமென்பதற்காக முன் வரிசையின் வலது பக்கம் இடம் பிடிக்க முந்துவார்கள்; பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்பின்றி சிறிது நேரம் எங்கேனும் சென்று விடுவார்களாகில் தேடித் திரிந்து மீண்டும் அவர்களைச் சந்திக்கும் வரை நிம்மதி பெற மாட்டார்கள். பெருமானார் (ஸல்) அவர்களின் முகத்தில் கவலையின் சாயல் படிந்தால் அவர்களின் முகத்தில்

கண்ணீர் வடியும். இத்தகைய நிலையில் நாடி நரம்புகளிலெல்லாம் நபிமணியின் நேசத்தை நிரப்பி வைத்திருந்த அந்த நேசர்கள் அன்று நிரந்தரமாகத் தங்கள் தலைவரை - நெஞ்சங் குடி கொண்ட நாயகரைப் பிரிந்து எங்ஙனம் நிம்மதி பெறுவார்கள்? பித்தர்களின் நிலையில் ஸஹாபாக்கள் காணப்பட்டார்கள். திக்குத் தெரியாமல் தறிகெட்டு ஓடினார்கள் சிலர். திக்பிரமை பிடித்து நின்ற இடத்திலேயே தலையைப் பிடித்துக் கொண்டு அமர்ந்து விட்டவர்கள் பலர்.

ஹழ்ரத் உஸ்மான் (ரலி) அவர்கள் பேசும் சக்தியை இழந்து பித்துப் பிடித்தவர்களைப் போல் தங்களின் வீட்டுக்கும் பள்ளிக்குமாகச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அனீஸ் (ரலி) அவர்களின் இதயத்தை அந்தப் பேரிடியானது தாக்க, அவர்கள் மரணித்தே விட்டனர். எவருடைய திருவாயில் இறைவனின் திருவசனங்கள் முன்கூட்டியே உருவாகிக் கொண்டிருந்தனவோ, எவரைக் கண்டு ஷைத்தான் பாதை மாறி ஓடிக் கொண்டிருந்தானோ, எவர் நபியாக இல்லாவிடினும் மறைவான ஞானங்களை அடையப் பெற்றிருந்தனரோ அவர்கள் - பொய்யையும் மெய்யையும் பிரித்தறிவிக்கும் அந்த உமர் அல்ஃபாரூக் (ரலி) தங்களின் வாளை உருவிக் கையில் பிடித்தவர்களாக, ''நபி பெருமான் (ஸல்) அவர்கள் இறந்து விட்டார்கள் என்று எவரேனும் கூறி விடுவாராயின் அவரின் தலையை என் வாளால் கொய்வேன். சத்தியமாக, ஹழ்ரத் மூஸா (அலை) அவர்கள் இறைவனோடு வசனிக்க 'ஸினாய்' மலைக்குச் சென்று திரும்பியது போல் பெருமானார் (ஸல்) அவர்களும் தங்களின் இறைவனோடு வசனிக்கச் சென்றிருக்கிறார்கள்; விரைவில் திரும்பி வருவார்கள்'' என்று முழங்கிக் கொண்டிருந்தனர். ஹழ்ரத் உமர் (ரலி) அவர்களின் நிலை கூண்டிலடைக்கப்பட்ட சிங்கத்தைப் போல் இருந்தது. அவர்க

ளுக்கு முன்னால் மற்றவர்கள் வாய் திறக்க அஞ்சிக் கொண்டிருந் தனர். ஒருவர் முகத்தை ஒருவர் பார்ப்பதேயன்றி இனிச் செய்வ தென்ன என்ற சிந்தனை ஒருவருக்கும் பிறக்கவில்லை. அந்நி லையில், ''அபூபக்கர் எங்கே?'' என்று ஒருவர் குரல் கொடுத் தார். எல்லோர் கண்களும் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்க ளைத் தேடின.

காலையில் நபி பெருமான் (ஸல்) அவர்களைச் சற்றுத் தெளிவுடன் கண்ட அபூபக்கர் (ரலி) அவர்கள், பெருமானரவர்க ளிடம் உத்தரவு பெற்று ஒரு மைல் தொலைவிலிருந்த தங்கள் குடும்பத்தைப் பார்க்கச் சென்றிருந்தனர். அபூபக்கர் (ரலி) அவர் கள் உடல் குடும்பத்தாரோடிருந்த போதும் உள்ளம் பெருமானா ரோடேயே இருந்தது; செய்தியறிந்ததும் மின்னலைப் போல் மீண்டு வந்தனர்; பள்ளியின் உள்ளே தங்களின் பார்வையைச் செலுத்தினர்; பீதியடைந்து கலங்கி நின்ற தோழர்களுக்கு நடுவே ஹழ்ரத் உமர் (ரலி) அவர்கள் நின்ற நிலைமையைப் புரிந்து கொண்டனர்.

நேராக வீட்டினுள் சென்ற ஸித்தீக்குல் அக்பர் நபி பெரு மான் (ஸல்) அவர்களின் உடலைப் போர்த்தியிருந்த துணியை நீக்கி அழகொளிரும் தங்களின் அன்புத் தலைவரின் திருமுகத் தைப் பார்த்தனர். தங்களின் திருக்கரத்தால் அவர்களின் புனித சிரசை சற்றே உயர்த்திப் பிடித்தனர். தோழரின் முகம் தோழரின் முகத்தோடு இணைந்து கொண்டது. நேசரின் கண்ணீர் நேசரின் முகத்தை நனைத்தது. நெற்றியில் முத்தமிட்டவர்களாக ''உயி ரோடிருந்த போதும் தாங்கள் இனிமையோடிருந்தீர்கள், இப் போதும் தாங்கள் இனிமையோடேயே இருக்கிறீர்கள். என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ் வின் ரஸூலே! தங்களுக்கென விதிக்கப்பட்டிருந்த மரணத்தைத் தாங்கள் சுகித்து விட்டீர்கள். நிச்சயம் அல்லாஹ் தங்களை இனி

மரணமடையச் செய்ய மாட்டான்'' என்று கூறி மீண்டும் துணியைப் போர்த்தி விட்டனர்.

அதன்பின் ஹழ்லரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் நேராகப் பள்ளியினுள் நுழைந்தனர். ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களின் சண்டமாருத ஓங்காரம் இன்னும் ஓய்ந்தபாடில்லை. அவர்களின் நிலையைக் கவனித்துக் கொண்டே மிம்பரில் ஏறி நின்ற ஸித்தீக் குல் அக்பர், முதலாவதாக ஹழ்லரத் உமர் (ரலி) அவர்களையே நோக்கி, ''சத்தியம் செய்துக் கொண்டிருப்பவரே! சற்றுத் தாமதிப்பீராக!'' என்று குரல் கொடுத்தனர். அபூபக்கர் (ரலி) அவர்களின் இடியோசை உமர் (ரலி) அவர்களை மவுனமுறச் செய்தது. அப்போது ஸஹாபாக்கள் ஹழ்லரத் அபூபக்கரின் புறம் சூழ்ந்தனர். அபூபக்கர் (ரலி) அவர்கள், ''தோழர்களே! உங்களில் எவரேனும் முஹம்மத் (ஸல்) அவர்களை வணங்கி வந்தாரெனில் இன்று முஹம்மத் (ஸல்) அவர்கள் மரணமடைந்து விட்டார்கள் என்பதை அவர் தெரிந்து கொள்ளட்டும். இன்னும் உங்களில் எவர் அல்லாஹ்வை வணங்கி வந்தாரோ நிச்சயமாக அல்லாஹ் உயிருடன் இருக்கிறான் என்பதையும் அவன் மரணமடைய மாட்டான் என்பதையும் அவர் அறிந்து கொள்ளட்டும். அல்லாஹ் கூறுகிறான்:

وَمَا مُحَمَّدٌ إِلَّا رَسُولٌ ۚ قَدْ خَلَتْ مِن قَبْلِهِ الرُّسُلُ ۚ أَفَإِن مَّاتَ
أَوْ قُتِلَ انقَلَبْتُمْ عَلَىٰ أَعْقَابِكُمْ ۚ وَمَن يَنقَلِبْ عَلَىٰ عَقِبَيْهِ فَلَن
يَضُرَّ اللَّهَ شَيْئًا ۗ وَسَيَجْزِي اللَّهُ الشَّاكِرِينَ ○

''முஹம்மத் (ஸல்) (இப்புவியில் வாழ்ந்து செல்ல வந்த) ஒரு தூதரேயன்றி வேறல்லர். அவருக்கு முன்னரும் (இவ்வாறே) தூதர்கள் பலர் சென்றிருக்கின்றனர். அவர் இறந்து விட்டால் அல்லது வெட்டப்பட்டு விட்டால் நீங்கள் புறங்காட்டிச் சென்று விடுவீர்களோ? (அவ்வாறு) எவனேனும் புறங்காட்டிச்

சென்று விட்டால், அதனால் அவன் அல்லாஹ்வுக்கு ஒன்றும் தீங்கிழைத்து விட மாட்டான். நன்றியறிவோருக்கு அல்லாஹ் அதி சீக்கிரத்தில் (நற்) கூலியைத் தருவான்'' (3:144) என்று உரை யாற்றினார்கள்.

அபூபக்கர் (ரலி) அவர்களின் அந்தச் சிற்றுரையில் ஓர் அற்பு தச் சக்தி அமைந்திருந்தது. கேட்டவர்கள் ஒரு மந்திரத்தால் கட் டுண்டவர்கள் போலானார்கள். ஹழ்லரத் உமர் இப்னுல் கத்தாப் (ரலி) அவர்கள் 'ஆர்த்து நின்ற அரிமா அவிந்தடங்கியதுபோல்' அமர்ந்து விட்டார்கள். ''திருமறையின் அந்த வசனத்தை அபூபக் கர் (ரலி) அவர்கள் ஓதியபோது அதனை அன்றுதான் புதிதாக இறங்கியது போல் நாங்கள் யாவரும் உணர்ந்தோம்'' என்று ஹழ்லரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். ''மதீ னாவின் தெருக்களில் தண்ணீர் எடுத்துச் சென்று கொண்டிருந்த ஒவ்வொரு பெண்ணின் வாயிலும் இந்த வசனத்தை அன்று நான் கேட்டேன்'' என்று ஒருவர் குறிப்பிடுகிறார். அனைவரும் இப் போது தன்னிலையடைந்து இனி ஆக வேண்டிய காரியங்க ளைக் கவனிக்கத் துவங்கினர்.

மறுநாள் காலை நபி பெருமான் (ஸல்) அவர்களின் புனித உடலை நீராட்டுவது பற்றி கலந்து பேசினார்கள். ''பெருமானார் (ஸல்) அவர்களின் திரு உடல் புனிதமும் பரிசுத்தமும் வாய்ந் தது. அதனை நீராட்ட வேண்டிய தேவை என்ன?'' என்றார் ஒருவர். ''நீராட்ட வேண்டியது அவசியமே. ஆனால் மேலாடை யைக் களைய வேண்டாம்'' என்றார் இன்னொருவர். ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களோ ''நீராட்டுவதென்பது பெருமானார் (ஸல்) அவர்களின் 'ஸுன்னத்' என்னும் வழிமுறையாகும். எவ ருடைய சொல்லுக்காகவும், வழிமுறையைத் தவற விட முடியா தென்றார்கள் இந்த விவாதத்தின் ஊடே அனைவரையும் ஒருசேர இலசான உறக்கம் அணைத்தது. மயக்க நிலையில்,

''நபியின் உடலை அவரின் மேலாடையைக் கழற்றாமலே நீராட்டுங்கள்'' என்ற அசரீரியான குரல் அனைவரின் செவிகளிலும் கேட்டது.

''குபா'வில் உள்ள 'பீரெ அரீஸ்' என்ற கிணற்று நீரையே நபி பெருமான் (ஸல்) அவர்கள் அன்றாடம் குடிக்கப் பயன்படுத்தி வந்தார்கள். அக்கிணற்றிலிருந்து ஏழு துருத்திகளில் நீர் கொணர்ந்து தங்களை நீராட்டும்படி முன்னமேயே அவர்கள் கூறியிருந்தார்கள். 'என்னுடைய வெட்கத் தலத்தில் எவருடைய பார்வையும் பட்டுவிடில் பார்வை பறிக்கப்பட்டு அவர் குருடராகி விடுவார். எனவே அலீ (ரலி)யைத் தவிர்த்து எவரும் என்னை நீராட்ட வேண்டாம்' என்று அவர்கள் எச்சரித்திருந்தார்கள். அதன்படி ஹழ்ரத் அலீ (ரலி), ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்களுடனும், அவர்களின் மக்களான ஹழ்லரத் பழ்ல், ஹழ்லரத் குஸம் (ரலி) அகியோருடனும், நபி பெருமான் (ஸல்) அவர்களின் ஊழியர்களான ஹழ்லரத் உஸாமா, ஹழ்லரத் ஷக்ரான் (ரலி) ஆகியோருடனும் பெருமானார் (ஸல்) அவர்களின் புனித உடல் வைக்கப்பட்டிருந்த அறையினுள் சென்று கதவை அடைத்தனர். அப்போது ஹழ்லரத் உஸ் இப்னு கவ்ல் அன்ஸாரீ (ரலி) அவர்கள் கதவைத் தட்டியவராக, ''அபல் ஹஸன்! இதில் எங்களுக்குண்டான உரிமையை அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு நான் கேட்கிறேன்'' என்று கதறினார். அவரின் பரிதவிப்பைக் கண்டு மனம் இரங்கிய ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் அவரையும் தங்களோடு சேர்த்துக் கொண்டனர். அனைவரின் கண்களும் துணிகளால் கட்டப்பட்டன. அன்ஸாரித் தோழர் வெளியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து சேர்ப்பிக்க ஹழ்லரத் பழ்ல் (ரலி) அவர்களும், குஸம் (ரலி) அவர்களும் நீரை அள்ளி ஊற்ற, ஹழ்லரத் அப்பாஸ் (ரலி) அவர்கள் புனித உடலைத் திருப்பித் திருப்பித் தர ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் உஸாமா (ரலி), ஷக்ரான் (ரலி) ஆகியோர்

துணையுடன் மேலாடையோடிருந்த புனிதத் திருவுடலைத் தேய்த்து நீராட்டினார்கள்.

முதலாவதாக சாதாரணத் தண்ணீரைக் கொண்டும், இரண்டாவதாக, 'பிரெ அரீஸ்' தண்ணீரைக் கொண்டும், மூன்றாவதாக கற்பூரத்தை நீரில் கலந்தும் நீராட்டப் பட்டது. என்றுமே நிலைகுலையாத அலீ (ரலி)யின் இதயம் அன்று மலை போல் கனத்திருந்தது. அல்லாஹ்வின் புலியின் சிந்தனை வாழ்க்கையின் பின்னோக்கிப் பறந்தது!

முப்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னால்!

அப்போது உலகில் எந்த நபியும் இருக்கவில்லை. அப்துல்லாஹ்வின் அநாதை மகனார் முஹம்மத் (ஸல்) கஅபாவை இடம் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு முன்னே அவர்களை வளர்த்துக் கொண்டிருந்த சிற்றன்னையார் - அபூதாலிபின் மனைவியார் - ஃபாத்திமாவும் நிறை மாதக் கர்ப்பிணியான நிலையில் கஅபாவைச் சுற்றிக் கொண்டிருக்கிறார். அப்போதே அவருக்கு பிரசவ வேதனை துவங்கி விட்டது. சிற்றன்னையின் வேதனை இழையோடிய முகம் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்களின் பார்வையில் படுகிறது. தங்களின் மக்களின் மீதானதை விட அதிகமான தனியொரு பாசம் ஃபாத்திமாவுக்கு முஹம்மத் (ஸல்) அவர்கள் மேல். அதேபோல், அநாதை முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் தனியொரு பந்தம் சிற்றன்னையிடம், கஅபாவின் வாசலானது அப்போது திறந்திருந்தது. கூட்டத்தின் மத்தியில் என்ன செய்வதென்று புரியாமல் வெட்கத்தால் நெக்குருகி நின்ற சிற்றன்னையைக் கஅபாவின் உள்ளே சென்று விடுமாறு யோசனை கூறி விட்டார்கள் அண்ணல் முஹம்மத் (ஸல்). ஃபாத்திமாவும் வேறு வழியின்றி மகனாரின் சொல்லை ஏற்று கஅபாவின் உள்ளே சென்றார். கஅபாவின் கதவுகளுக்குப் பின்னால் அவர் மறைந்த அடுத்த கணமே ஹழ்லரத் அலீ (ரலி) அவர்கள் அங்கே பிறந்தார்கள்.

தாயும் சேயும் வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். தம் வணக்கத்தை முடித்துக் கொண்டு தம்பியைப் பார்க்க ஆவலோடு ஓடோடி வந்தார்கள் அண்ணல் முஹம்மத் (ஸல்). வீடோ அமைதி குடிகொண்டிருந்தது. பெண்களின் பிறப்பையே கேவலமாக எண்ணி உயிரோடு குழிதோண்டிப் புதைக்கும் வழக்கமுடைய அரபு நாட்டில் அன்று ஆண் குழந்தை பிறந்திருந்தும் வீட்டார் அனைவரின் முகத்திலும் சோகம் தாண்டவமாடுவதேன்? முஹம்மத் (ஸல்) அவர்கள் விசாரிக்கிறார்கள். 'உம்மு ஹானி' என்ற ஒரு மாது சிரோன் மணி கவலையோடு கூறினார். 'ஆண் குழந்தை பிறந்து என்ன செய்வது அல் அமீன்!' அது கண் திறந்து பார்க்கவில்லையே! என்று. முஹம்மத் (ஸல்) அவர்களின் முகத்திலும் கவலை பற்றிக் கொண்டது. தம்பியை வாரி அணைக்க எத்துணை ஆசையோடு வந்தார்கள். பாவம் குருட்டுக் குழந்தையா பிறக்கவேண்டும். என்ன செய்வது? ''சரி குழந்தையையேனும் காட்டுங்கள்! நான் பார்க்கட்டும்'' என்று கேட்டார்கள். குழந்தையைக் கொண்டு வந்து அவர்களின் கைகளில் கொடுக்கப்பட்டது. ஆவலோடு வாங்கிப் பார்த்தார்கள் அண்ணல் முஹம்மத் (ஸல்). என்ன ஆச்சரியம்! குழந்தை அவர்களின் அழகுத் திருமுகத்தைக் கண் திறந்து பார்த்து தன் வாய் திறந்து சிரித்தது. அனைவரின் முகங்களும் மலர்ந்தன. அமைதியில் அமிழ்ந்து கிடந்த வீட்டில் ஆனந்தம் பொங்கி வழிந்தது.

பிறந்த குழந்தையை நீராட்டவில்லையே என்ற நினைப்பு இப்போதுதான் பெண்களுக்குப் பிறந்தது. குழந்தையை நீராட்டத் தருமாறு கேட்டனர். ஆனால் இளவலைப் பிரிய முஹம்மத் (ஸல்) அவர்களின் இதயம் இணங்கவில்லை. ''கொண்டு வாருங்கள் நீரை நானே நீராட்டுவேன்'' என்று கேட்டனர். ஒரு பாத்திரத்தில் நீர் கொண்டு வந்து தரப்பட்டது. நீரைக் கையிலே

வாங்கிய அண்ணல் முஹம்மத் (ஸல்), குழந்தையை நீராட்டிக் கொண்டே தம் திருவாய் திறந்து ''இக் குழந்தையை இன்று முதன் முதலாக நான் நீராட்டுகிறேன்; இதே குழந்தை வளர்ந்து பின்னால் என்னை இறுதியாக நீராட்டும்'' என்று கூறினார்கள். 'பிறப்பது அல்லாஹ்வின் வீட்டில்தான் பிறப்பேன், கண் விழிப் பது நபியின் முகத்தில்தான் விழிப்பேன்' என்ற உறுதியில் அறுதி கண்ட அல்லாஹ்வின் புலியாகிய ஹழ்லரத் அலீ (ரலி) அவர்க ளின் சிந்தனையில் அந்த நிகழ்ச்சி இப்போது நிழலாடுகிறது. அப்போது பெருமானார் (ஸல்) அவர்கள் நபியாகவும் தங்க ளைப் பிரகடனப்படுத்தியிருக்கவில்லை. ஆனால் அன்று அவர் கள் கூறிய தீர்க்கத்தரிசனம் எவ்வளவு சரியானதாக இன்று நிறை வேறுகிறது!

அலீ (ரலி) அவர்களின் கண்கள் நீரை வடித்துக் கொண்டி ருந்தன. நாவானது சோக கீதம் பாடிக் கொண்டிருந்தது.

'என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். எவருடைய மரணத்தாலும் ஏற்படாத இழப்பை நாங்கள் தங்க ளின் மரணத்தால் அடைந்தோம்.

''நபித்துவம் தங்களோடு முற்றுப் பெற்று விட்டது.''

''மறைவான செய்தியும் வானிலிருந்து வஹீயும் இனி எங் களை வந்தடையப் போவதில்லை.''

''தங்களின் மரணம் ஈடில்லாத ஒரு துயரமாகும். தாங்க இயலாத துயரத்தால் எங்கள் உள்ளங்கள் சூழப்பட்டுள்ளன. இன்றைய தினம் இந்த நிலையில் எங்களில் யாரும் முன் பின் னாக இல்லை.

''புலம்பலைத் தவிர்த்துப் பொறுமையைத் தாங்கள் எங்க ளுக்குப் போதிக்காதிருந்தால்! அல்லாஹ்வின் ரஸூலே! எங்க ளின் கண்ணீரால் அல்லவா உங்களை நீராட்டுவோம்.

''இந்தப் புண்ணானது ஆறக் கூடியது அல்ல. இந்தத் துயரம் தீரக் கூடியதல்ல. எங்களின் தாய் தந்தையர்கள் உங்களுக்கு அர்ப் பணம். இறைவனின் திருச்சமுகத்தில் எங்களைப் பற்றிக் குறிப் பிடாமல் இருந்து விடாதீர்கள்.''

நீராட்டப்பட்ட பின்னர் புனித உடல் மேலும் இரண்டு துணிகளைக் கொண்டு போர்த்தப்பட்டது. பின்னர் ஒரு பலகை யின் மேல் புனிதத் திரு உடலை வைத்து அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டினுள் வைத்து விட்டு அனைவரும் வெளிவந்த னர். முதலில் ஹழ்ரத் ஜிப்ரஈலும் பின்னர் வானவர் யாவரும் வரிசை வரிசையாக வந்து தொழுது சென்றனர். அதன்பின் மனி தர்களில் முதலாவதாக புனித குடும்பத்தார்கள், பின்னர் முஹா ஜிர்கள், பின் அன்ஸார்கள், பின் மற்ற கூட்டத்தார்கள், முதலில் ஆண்கள், அதன் பின் பெண்கள், அதன் பின் குழந்தைகள் என வரிசை வரிசையாகத் தொழுதனர். மனிதர்கள் மட்டும் 72 முறை தொழுகை நடத்தினர். எவரும் இமாமாக நிறுத்தப்படவில்லை. 'வாழ்க்கையில் எங்களுக்கு இமாமாக இருந்த நீங்களே இப்போ தும் எங்களுக்கு இமாமாக இருக்கிறீர்கள்'' என்று அலீ (ரலி) அவர்கள் கூறி விட்டார்கள்.

புனித உடலை இப்போது எங்கு அடக்கம் செய்வது என் பது பற்றி சர்ச்சை பிறந்தது. 'அதிகமான நபிமார்கள் அடங்கப் பெற்றுள்ள பைத்துல் முகத்தஸில்' என்றார் ஒருவர். 'அல்ல, கஃஅபாவைத் தாங்கி நிற்கும் புனித பூமிக்கு எடுத்துச் செல் வோம்' என்றார் மற்றொருவர். 'மஸ்ஜிதுன்னபவீயில்' என்றார் மூன்றாமவர். 'ஜன்னத்துல் பகீஇல்' என்றார் இன்னொருவர். இறுதியில் ஹழ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள், ''நபிமார்கள் எங்கே மரணமடைந்தார்களோ அங்கேயே அடக்கப்படுவார்கள் என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டிருக்கி றேன்'' என்றார்கள். ஹழ்ரத் அலீ (ரலி) அவர்களும் அத

னையே வலியுறுத்தினார்கள். யாவராலும் அச்சொல் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இப்போது மண்ணறை எவ்விதம் தோண்டுவதென யோசிக்கப்பட்டது. ஏனெனில் மக்காவின் முறை வேறு, மதீனாவின் முறை வேறாக இருந்தது. ஹழ்லரத் அபூ உபைதா (ரலி) அவர்கள் மக்காவின் முறைப்படியும், ஹழ்லரத் அபூ தல்ஹா (ரலி) அவர்கள் மதீனாவின் முறைப்படியும் மண்ணறை தோண்டிப் பழக்கப்பட்டவர்கள். இருவருக்கும் ஆள் அனுப்பி முதலில் எவர் வந்து சேருகிறாரோ அவரின் முறைப்படி மண்ணறை அமைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அதன்படி ஹழ்லரத் அபூ தல்ஹா (ரலி) அவர்கள் முதலில் வந்து சேரவே மதீனாவின் முறைப்படியே மண்ணறை அமைக்கப்பட்டது.

இறுதியாக, செவ்வாய் மாலை, புதன்கிழமை பின் இரவு ஸஹ்ருடைய நேரத்தில் ஹழ்லரத் அலீ, ஹழ்லரத் அப்பாஸ், ஹழ்லரத் பழ்ல், ஹழ்லரத் குஸ ம் (ரலி) ஆகியோர் மண்ணறையில் இறங்கி புனிதத் திரு உடலை வைத்து வெளியேறினார்கள். இவர்களில் இறுதியாக வெளிவந்தவர்கள் ஹழ்லரத் குஸ ம் (ரலி) அவர்களே, நபிபெருமான் (ஸல்) அவர்களின் திரு உடலை, இறுதியாகக் கண்ட பெருமைக்குரியவர்கள் அவர்களே.

சமுதாயத்தைப் பற்றிய சிந்தனையால் வாழ்நாளின் எந்த இரவிலும் பூரணமாக உறங்கி அறியாத புனிதக் கண்கள் அன்று அமைதியாக உறங்கத் துவங்கின.

மடமையை நீக்கி அறிவுடைமையை நாட்ட ஓயாது உழைத்த புனித உடல் இனி ஓய்வு கொள்ளத் துவங்கியது.

அருளாளன் அன்புடையோன் அகிலங்களுக்கோர் அருட்கொடையாக அனுப்பி வைத்த அருளும் அன்பும் நிறைந்த அரு

மைத் தூதர் மஸ்ஜிதுன் னபவீயில் மதீனாவின் மண்ணறையில் இறவாத வாழ்வு பெற்றிலங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

★ ★ ★

## அகிலங்களுக்கோர் அருட்கொடை

وَمَا أَرْسَلْنَاكَ إِلَّا رَحْمَةً لِّلْعَالَمِينَ

"(நபியே!) நாம் உம்மை உலகத்தார் யாவருக்கும் ஓர் அருளாகவே அனுப்பியிருக்கின்றோம்" என்று திருமறை (21:107) கூறுகிறது.

இருள் சூழ்ந்த உலகுக்கு ஓர் அருளொளியாக அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் பிறந்ததன் பலனாக உலகம் பெற்ற உயர்வுகள் வர்ணனைகளைக் கடந்தவை.

உலகு, விண், இரவி, திங்கள்
ஒளிர் உடுக் கணம் சுவர்க்கம்
மலை கடல் நதி பாதாளம்
வானவர் முதலாய் - யாவுமே

அவர்களின் பிறப்பால் உயர்வடைந்தன. ஆதம் நபிக்குக் கிடைத்த மன்னிப்பு, நூஹ் நபி பெற்ற ஈடேற்றம், இப்ராஹீம் நபி பெற்ற கார்மானம் யாவும் அவர்களின் பரக்கத்தால்.

யஅகூப் நபியின் கண்ணொளி, யூஸுஃப் நபியின் முக ஒளி, மூஸா நபி கண்ட பேரொளி அவர்களுடையதாகவே இருந்தது. அவர்கள் பிறந்த பேரருளாலேயே ஈஸா நபி பற்றிய உண் மையை உலகம் அறிந்தது.

நபிமார்கள் யாவருக்கும் பேரருளாய் இருந்த அவர்களின் திருப் பொருட்டால் அவர்களின் தந்தை அப்துல்லாஹ் பலி

பீடத்திலிருந்து காக்கப் பெற்றார்கள். அன்னை ஆமினா கர்ப்பத்தின் வேதனையை அறியாதிருந்தார்கள். ஹலீமா அந்த நபியைப் பாலூட்டி வளர்த்ததாக வரலாறு கூறுகிறது. ஆனால் உண்மையில் அவர்களல்லவோ ஹலீமாவின் குடும்பத்தையே வளர்த்தனர்!

இவ்வாறாகப் பிறப்பதற்கு முன்னமேயே யாவருக்கும் பேரருளாளராக இருந்த பெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்த பின்னால்!

அந்தகாரம் அகன்றது; அறியாமை அழிந்தது; அனாச்சாரங்கள் ஒழிந்தன; பெண்களின் வாழ்வு மலர்ந்தது; பேதங்கள் ஒழிந்தன. பரதேசிகளாக அலைந்து திரிந்தவர்கள் அவர்களின் வரவால் பாராளும் திறன் பெற்றனர். இருண்ட இதயம் கொண்டிருந்தவர்கள் அம்மாநபியின் தோழமையால் உலகையே வழி நடத்தும் 'ஹாதீ'களாக மாறினர்.

பனிரண்டு ஆண்டு காலச் சோதனைகளைத் தாங்கி பெருமானார் திரு நபி (ஸல்) அவர்கள் சேர்த்த சாதனைகள் இறுதி நாள் வரையும் உலகத்துப் பேரருட்களாக அமைந்து விட்டன. முஸ்லிம்களுக்கு மட்டுமேயன்றி முழு உலகுக்கும் ஒளி வீசும் திருவிளக்காக, வழிகாட்டும் மணிவிளக்காக அவர்கள் திகழ்கிறார்கள்.

உலகத்தார் யாவருக்குமே அவர்கள் ஓர் அருட்கொடை என்பதை இன்று உலகம் நன்றியோடு ஏற்கிறது.

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்,

அருளும் அன்பும் நிறைந்த ஒரு நபியை, அகிலத்தாருக்கு ஓர் அருட்கொடையாகவே அனுப்பி வைத்தான். அந்த நபி அகிலத்தாரின் மீது அருளையும் அன்பையும் அள்ளிச் சொரிந்தார்கள்.

அன்பு நிறைந்த அவர்களின் அற வழிப் போதனையால்,

பண்பில் சிறந்த அவர்களின் குண நலப் பழக்கத்தால், கனிவோடமைந்த அவர்களின் கருணைப் பார்வையால் ஏழைகளை ஏற்றம் பெறச் செய்தார்கள்; துன்பத்தில் தோள் கொடுத்தார்கள்; துயரத்தில் துணை நின்றார்கள்; விதவைகளை வாழ்வித்தார்கள்; அநாதைகளை ஆதரித்தார்கள்; கைதிகளுக்குப் புகலிடம் தந்தார்கள்; நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவினார்கள்; பாவமான காரியங்களிலிருந்து விலக்கினார்கள்; நல்லவற்றை ஆகுமாக்கி வைத்து, தீயவற்றைத் தடுத்து விட்டார்கள்; அவர்களுடைய பளுவை அவர்களை விட்டுப் போக்கி, அவர்கள் மீதிருந்த விலங்குகளையும் நீக்கினார்கள். (7:158) அறுபத்து மூன்றாண்டுகளில் இவை யாவையும் செய்து விட்டு இறுதியில் அனைவரையும் அநாதைகளாக்கி விட்டுச் சென்றார்கள்!

வெங்கொடுமைச் சாக்காடாக இருந்த உலகத்தைத் தங்க மலர்ப் பூஞ்சோலையாக்கிய பின், அதிலே பூத்துக் குலுங்கிப் பரவசம் தந்த வாச மலர் பறிக்கப்பட்டு விட்டது. மனித வர்க்கத்துக்கும் ஆன்மீக உலகத்துக்கும் பேரிழப்பல்லவா இது! அருளாளனாகிய இறைவன் தன் அருளுக்காக ஏங்கி நிற்கும் உலகத்துக்கு இத்தகைய பேரிழப்பைத் தந்ததேன்? எந்த ஒரு மலருக்காக இந்த உலகமெனும் பூஞ்சோலையைப் படைத்தானோ, அந்த மலரை இத்தனை விரைவில் அவன் பறித்துக் கொண்டதேன்? தன் அருட் கொடையை விட்டும் மனித வர்க்கத்தை நிர்க்கதியாக்கவா? அல்லவே அல்ல! அதுவும் அல்லாஹ்வின் அருட் கொடையேயாகும்.

அருமைப் பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தங்கள் அன்புத் தோழர்களை நோக்கி, "அருமைத் தோழர்களே! என் வாழ்வு உங்களுக்கோர் அருட்கொடையாகும். நான் உங்களோடு பேசுகிறேன். நீங்கள் விளக்கங் கேட்கிறீர்கள். நான் வழி காட்டுகிறேன். நான் மரணமடைந்தேனேயானால் என் மரண

மும் உங்களுக்கோர் அருளேயாகும். ஏனெனில் மரணத்துக்குப் பின்னால் உங்களின் செயல்கள் எனக்கு எடுத்துக் காட்டப்படும். அச்செயல்கள் நல்லனவாக இருப்பின் நான் இறைவனுக்கு நன்றி செலுத்துவேன். அச் செயல்கள் தீயனவாக இருப்பின் உங்களுக்காக இறைவனிடம் பிழை பொறுக்கத் தேடுவேன்'' என்று கூறினார்கள்.

நபி பெருமான் (ஸல்) அவர்களின் வாழ்வும் மரணமும் நமக்கு அருளே என்றாலும் அந்த வாழ்வு இத்துணை குறுகிய தாக ஏன் இருக்க வேண்டும்? இஸ்லாம் தோன்றி இருபத்து மூன்று ஆண்டுகளே ஆயிருந்தன. மக்காவின் வெற்றியானது கிடைத்து மக்கள் அவர்களின் பார்வையையே பாக்கியமாக எண்ணி அணி திரளத் துவங்கி மூன்றாண்டுகளே ஆயிருந்தன. அதற்குள்ளாகவே இறப்பின் வாசல் அவர்களுக்குத் திறக்கப்பட் டதேன்? அதுவும் அல்லாஹ்வின் ஓர் அருளே என்பதற்கு இதோ நபி பெருமான் (ஸல்) அவர்களே காரணம் கூறுகிறார்கள்.

''இறைவன் ஒரு சமூகத்தின் மீது அருள் புரிய நாடினால் அச்சமூகத்தாருக்கு முன்பாகவே அவர்களின் நபியை மரணம டையச் செய்கிறான். அந்த சமூகத்தவரின் பிழை பொறுக்கத் தேடி வந்த முன்னோடியாக அந்த நபியை அவன் ஆக்கி விடுகி றான். எந்த சமூகத்தையேனும் அதன் பாவத்தின் காரணமாக அவன் அழிக்க நாடினால் அவர்களின் நபியை உயிருடன் இருக் கச் செய்து, அவரின் வாழ்நாளிலேயே அந்த சமூகத்தின் மீது வேதனையை இறக்கி விடுகிறான். நன்றி கெட்ட சமூகத்தின் நாசத்தைக் கண்டு அந்த நபியின் கண்களைக் குளிரச் செய் கிறான்'' என்று நபி பெருமான் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹழ்லரத் அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஆம்! ஒரு நபியின் இலட்சியம் தம் சமூகத்தை வழிகேட்டி லிருந்து காத்து, நேர்வழியின்பால் நிலைப்படுத்தி வைப்பதா

கும். தம் இலட்சியத்தில் அந்த நபியானவர் வெற்றி காணும் போது இறைவன் அந்த நல்லடியாரின் பணியைப் போற்றி, அவரைத் தன் அளப்பரும் கருணையால் ...பார்த்துவதற்குத் தன் சந்நிதானத்துக்கு அழைத்துக் கொள்கிறான். அவரின் சமூகம் அவர் விட்ட பணியைத் தொடர்கிறது. ஆனால் ஒரு சமூகம் தன் நபியின் வழியைப் புறக்கணித்து, தறி கெட்டுச் செல்லும்போது இறைவன் அச்சமூகத்தை கடினமான வேதனையில் சிக்கச் செய் கிறான். முந்திய நபிமார்களின் வரலாறுகள் நமக்குப் போதிக் கும் பாடங்கள் இவை.

1. பிரளயத்தால் மூழ்கடிக்கப்பட்ட, நூஹ் நபியவர்களின் சமூகம்.

2. கடுமையான புயல் காற்றினால் அழிக்கப்பட்ட, ஹூத் நபி அவர்களின் சமூகம்.

3. இடி முழக்கம் போன்ற பூகம்பத்தால் அழிக்கப்பட்ட, ஸாலிஹ் நபி அவர்களின் சமூகம்.

4. பூமியோடு தலைகீழாகப் புரட்டப்பட்ட, லூத் நபியு டைய சமூகம்.

5. நைல் நதியில் மூழ்கடிக்கப்பட்ட, ஃபிர்அவ்னின் கூட் டம்.

6. அவனுடைய சகல சம்பத்துகளோடும் பூமியால் விழுங் கப்பட்ட காரூன்.

7. பூகம்பத்தாலும் நெருப்பு மழையாலும் அழிக்கப்பட்ட, ஷுஐப் நபியின் 'மதியன்' சமூகம்.

8. நாற்பது ஆண்டுகள் வரை 'ஸினாய்' பாலைவனத்தில் தட்டழிந்த பனீ இஸ்ராயீல் சமூகம்.

இவை யாவும் **வரலாற்றின் வாயிலாக** நமக்கு அந்த உண் மையை உணர்த்துக் **கொண்டிருக்கின்றன.**

ஒரு சமூகத்தின் மேல் பரிபூரணத் திருப்தி கொண்டவராக அவர்களின் நபி முன்னதாகவே அவர்களை விட்டும் பிரிந்து அச்சமூகத்துக்காகப் பிழை பொறுக்கத் தேடி இறைவனின் சந்நிதானத்துக்குச் செல்லும்படியான நற்பேறு பெற்ற ஒரு சமூகம் பெருமானார் முஹம்மத் (ஸல்) அவர்களைப் பின் பற்றிய இஸ்லாமிய சமூகம்தான். இதையே நபி பெருமான் (ஸல்) அவர்கள் மஸ்ஜிதுன் னபவியில் நிகழ்த்திய பேருரையில் பெருமிதத்தோடு குறிப்பிட்டார்கள். அவர்களின் பிரார்த்தனையாலேயே இறைவன் இச் சமூகத்தை, பகிரங்கமான அழிவுகளில் சிக்க வைத்து வேதனை செய்வதை விட்டும் காத்தருள் புரிகின்றான்.

வாழ்நாள் முழுவதுமே அவர்கள் ஓர் அருளாகவே வாழ்ந்தார்கள். நுபுவ்வத்துக்கு முன் 'ஸாதி(க்)குல் வஃதுல் அமீன்' ஆக அவர்கள் உலவிய நாற்பது ஆண்டு காலத்திலும் சரி, சொல்லடியும் கல்லடியும் கொண்ட சோதனைப் புயலால் மக்காவின் வீதிகளில் அவர்கள் அலைக்கழிக்கப்பட்ட பனிரண்டு ஆண்டு கால வாழ்விலும் சரி, மதீனாவின் பத்தாண்டு கால வாழ்விலும் சரி, எந்தப் பகலிலும் அவர்களின் எண்ணம் தங்கள் சமூகத்தைப் பிரிந்ததில்லை. எந்த இரவிலும் அவர்கள் தங்கள் கூட்டத்தை மறந்ததில்லை. பிறந்த நேரத்திலும் மண்ணறை புகுந்த நேரத்திலும் கூட அவர்கள் சமுதாயத்தை மறந்ததில்லை. அத்தகைய ஒரு நபி இறந்த பின் அவர்கள் வாழும் புனித உலகில் மட்டும் சமுதாயத்தை எங்ஙனம் மறப்பார்கள்?

وَصَلِّ عَلَيْهِمْ إِنَّ صَلَوٰتَكَ سَكَنٌ لَّهُمْ

"அவர்களை ஆசீர்வதிப்பீராக! உம்முடைய ஆசீர்வாதம் நிச்சயமாக அவர்களுக்கு ஆறுதல் அளிக்கும்" என்ற இறைவனின் (9:103) ஆணையை உலக வாழ்விலும் அவர்கள் நிறைவேற்றினார்கள்; ஆன்மீக வாழ்விலும் நிறைவேற்றுகிறார்கள்

அதனால்தான் இன்றைக்கும் அவர்களின் தரிசனத்துக்காக மதினா நகருக்கு வரும் ஹஜ்ஜாஜிகள் அவர்களின் புனித சந்நிதானத்தில்,

وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُوْٓا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ
وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا

"அவர்கள் தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்ட சமயத்தில் உம்மிடம் வந்து அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி (அல்லாஹ்வுடைய) தூத (ராகிய நீரு)ம் பாவ மன்னிப்பைக் கோரியிருந்தால், மன்னிப்புடையோனாகவும் கிருபையுடையோனுமாகவே அல்லாஹ்வை அவர்கள் கண்டிருப்பார்கள்" என்ற திருமறை (4:64) வசனத்தைக் காணிக்கையாக ஓதிப் பின்னர், "இறைவா! மெய்யான உன் சொல்லைக் கொண்டு நீ எங்களுக்குக் கட்டளையிட்டபடி இதோ நாங்கள் எங்களின் ஆன்மாக்களுக்குத் தீங்கிழைத்துக் கொண்டவர்களாக இன்று பச்சாதாபப்பட்டு உன் திருத்தூதரின் சந்நிதானத்தில் வந்து நின்று விட்டோம். அவர்களின் பரக்கத்தைக் கொண்டு எங்களின் பிழைகளைப் பொறுத்தருள்" என்று பிரார்த்திக்கிறார்கள்.

"என் மறைவுக்குப் பின்னர் என் அடக்கவிடத்தை வந்து தரிசிப்பவர் என்னை நேரில் தரிசித்தவர் போலாவார்."

"அவருக்கு இறைவனிடம் பரிந்துரைப்பது என்பது என் மீது கடமையாகி விட்டது" என்பவை அண்ணல் எம் பெருமான் (ஸல்) அவர்களின் வாக்குறுதிகளாகும்.

"நாயகமே! தங்களின் மறைவிற்குப் பின் நாங்கள் வந்து நின்று ஸலாம் கூறுவதைத் தாங்கள் செவியுறுவீர்களா?" என்று ஸஹாபாக்கள் கேட்டபோது நபி பெருமான் (ஸல்) அவர்கள், "ஆம்! நான் அவற்றை செவியேற்று பதில் கூறுகிறேன்" என்றார்

கள். அவ்வாறு அவர்கள் கூறுகின்ற பதில் நம்முடைய செவிக ளுக்குக் கேட்கவில்லையெனில் அது நம்முடைய ஆன்ம பரிபக் குவத்தின் குறைவேயன்றி வேறல்ல. ஏனெனில் நபி பெருமான் (ஸல்) அவர்கள், ''ஸாதி(க்)குல் வஅதுல் அமீன் - உண்மையாள ரும் வாக்குறுதி காப்பவர்களும்'' ஆவார்கள்.

உத்பா என்ற ஓர் ஆன்மீகப் பெரியாரின் கூற்று இங்கே குறிப்பிடப்படுவதற்குப் பொருத்தமாக உள்ளது.

'மஸ்ஜிதுன் னபவீயில் எம்பெருமானார் (ஸல்) அவர்க ளின் புனித 'ரவ்ழ்லா'வின் அருகில் அமர்ந்திருந்தேன். ஓர் அரபி யானவர் அப்போது அங்கே வந்து, ''அல்லாஹ்வின் ரஸூலே! தங்கள் மீது இறைவனின் அருள் மாரி பொழியட்டும்! தங்க ளைப் பற்றி இறைவன் கூறியுள்ளதை நான் ஓதினேன்'' (என்று கூறி திருமறையில் 4:64 வசனத்தை ஓதி) 'இதோ ஒரு பாவியான வன் இறைவனின் மன்னிப்பை நாடி தங்களின் திருச் சந்நிதானத் தில் வந்து சேர்ந்து விட்டேன். இப்போது தங்களின் திருக் கர மேந்தி இறைவனின் சந்நிதானத்தில் எனக்குப் பிழை பொறுக் கத் தேடுவதை ஆசித்தவனாக இருக்கிறேன்'' என்று கூறி நின் றார். சற்று நேரம் கழித்து அந்த அரபியானவர் அங்கிருந்து செல் லத் துவங்கினார். நானோ உறக்கத்துக்கும் விழிப்புக்கும் இடைப்பட்டவனாக இருந்தேன். அந்நிலையில் நபி பெருமான் (ஸல்) அவர்கள் எனக்குத் தோற்றம் வழங்கி, ''உத்பா! எழுந்தி ரும், அதோ செல்லும் அந்த அரபியைச் சந்தித்து 'இறைவன் உம் பிழைகளைப் பொறுத்து உமக்கு அருள் புரிந்தான்' என்ற நற்செய்தியைச் சொல்லும்'' என்று கூறி மறைந்தார்கள்.

இவ்வாறான சம்பவங்கள் ஒன்றல்ல இரண்டல்ல; வர லாறு நெடுகிலும் ஏராளமாக விரவிக் கிடக்கின்றன. மதீனாவில் மஸ்ஜிதுன் னபவீயில் மண்ணறை வாழ்வை அவர்கள் மேற் கொண்டு பதினான்கு நூற்றாண்டுகள் முடிந்து விட்டன. இற வாத அருள் வாழ்வைப் பெற்ற எம் பெருமானார் (ஸல்) அவர்

கள் இன்றும் 'ஹயாத்துன்னபி'யாக இருந்து, 'ஸலவாத்தையும் ஸலாமை'யும் கொண்டு தங்களை நினைக்கும் நேசர்களின் நெஞ்சங்களுக்கு நிம்மதியையும், மகிழ்வையும் தருபவர்களா கவே இருந்து வருகிறார்கள்.

ஃ ஃ ஃ

மனித சமுதாயத்துக்கு இறுதி நபியாக வந்த அல்லாஹ்வின் அருமைத் தூதர் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் பிரிவுத் தருவாயில் விட்டுச் சென்ற சொத்துகள் இருவகைப்பட்டனவா கும். அவற்றை, தார்மீகச் சொத்துக்கள் என்றும் ஆன்மீகச் சொத் துகள் என்றும் பிரிக்கலாம். ''நபிமார்கள் விட்டுச் செல்லும் சொத்துகளுக்கு எவரும் வாரிசுரிமை கொள்ள முடியாது'' என்ற அவர்களின் திருவாய் மொழி தார்மீகச் சொத்துகளைப் பற்றிய தேயாகும். ஆனால் வாரிசுரிமை கொள்ளும்படி, தார்மீகச் சொத் தாக அவர்கள் தங்கத்தையோ, வெள்ளியையோ விட்டுச் செல்ல வில்லை.

பெருமானார் (ஸல்) அவர்களின் மதீனா வாழ்வு பஞ்சமோ பற்றாக்குறையோ கொண்டதல்ல.

وَلَلْآخِرَةُ خَيْرٌ لَّكَ مِنَ الْأُولَىٰ ۝

''உம்முடைய பிந்திய நிலை உம்முடைய முந்திய நிலையை விட மேலானதாகவே இருக்கிறது'' என்ற திருமறை யின் (98:4) தீர்க்க தரிசனப்படி நபி பெருமான் (ஸல்) அவர்களின் இறுதிக் காலம் வளம் கொழிக்கும் பொற்காலமாகவே இருந் தது. அவர்களின் தொண்டுகளுக்கும் தியாகத்துக்கும் உண்டான மேலான பலன் அவர்களுக்கு மறுமை வாழ்வில் இருக்கவே இருக்கிறது. ஆனாலும் அவர்களின் இம்மை வாழ்விலும் இறை வன் அவர்களைக் கைவிட்டு விடவில்லை. பொன்னையும்

வெள்ளியையும் மதீனாவில் மலைகளைப் போல் அவர்களின் இருபுறத்திலும் குவியச் செய்தான் இறைவன். ஆனாலும் நபி பெருமான் (ஸல்) அவர்கள் அவை யாவற்றையும் ஏழைகளுக் கும், எளியவர்களுக்கும், சோதனையில் உறுதுணையாய் நின்ற உற்ற தோழர்களுக்கும் வாரித் தந்து மகிழ்ந்தார்கள். அவர்களின் கொடைக்கும் தாராளத் தன்மைக்கும் உதாரணம் காட்டுவது மிகச் சிரமமாகும். வெகு தொலைவிலிருந்து அவர்களைக் காண வந்த கிராமவாசிகள் தங்களின் மக்களிடத்தில் திரும்பிச் சென்று, "புதிதாக வந்துள்ள அந்த நபி யாவரையும் சீமான்களாக்கி விடு கிறார்" என்று புகழும் அளவுக்கு அவர்கள் அள்ளி அள்ளிக் கொடுத்தார்கள். அவர்களுக்குப் பாலூட்டிய அன்னை ஹலீமா ஸஃதிய்யாவின் குடும்பத்தார் அவர்களைக் காண வந்த போது, அவர்களுக்கு நாற்பதினாயிரம் ஆடுகளை அன்பளிப்பாகக் கொடுத்து அனுப்பி வைத்தார்கள். ஆனால்! மஸ்ஜிதுன்னபவி யில் மதியத் தொழுகையின் தருணத்தில் மலை போல் இருந்த பொற்குவியலை மாலை நேரத் தொழுகைக்குள் அறம் செய்து முடித்த அந்தத் துறவி வள்ளல் தங்களின் வீட்டினுள் என்ன வைத்திருந்தார்கள்!

மண்ணுலகும் விண்ணுலகும் புரக்க வந்த அந்தப் பூமான் நபியின் வீட்டில் மரணத்திற்கு முந்தின இரவில் விளக்கெரிக்க எண்ணெய் இருக்கவில்லை. வெறும் ஏழு தினார்களே - எஞ்சி யிருக்கவும் நெஞ்சம் பொறுக்காத அப்புரவலர் 'மரணத்தின் மடியிலும்' அதனையும் அறம் செய்தே ஆறுதல் பெற்றார்கள்.

இனி அவர்கள் விட்டுச் சென்ற ஆன்மீகச் சொத்துகள் பற்றி கவனிப்போம். இறுதி ஹஜ்ஜின் போது அரஃபாவின் வெளி யில் தங்களின் ஓர் இலட்சத்து இருபத்து நாலாயிரம் தோழர்க ளுக்கிடையே அருளுரை பகர்ந்த அருமைப் பெருமானார் (ஸல்) அவர்கள், "மக்களே! நீங்கள் பற்றிப் பிடித்துக் கொண்டால் அதன் பின் எப்போதுமே வழிதவறி விட மாட்டீர்களே, அந்த

கைய இரு விஷயங்களை உங்களிடையே நான் விட்டுச் செல்கி றேன். அவை அல்லாஹ்வின் திருவேதமும் அவனுடைய ரஸூ லின் முன்மாதிரியுமாகும்'' என்று குறிப்பிட்டார்களே, அந்த அல்லாஹ்வின் திரு வேதமும் ரஸூலுல்லாஹ்வின் வழிமுறை யுமே அவர்கள் விட்டுச் சென்ற ஆன்மீகச் சொத்துகளாகும். இந்த ஆன்மீகச் சொத்துகளுக்கு அனந்தரங் கொள்ளும் உரிமையை அல்ல - ஆணையையே இறைவனின் திருமறை நம் மீது விதித்து விட்டது.

وَمَآ اٰتٰىكُمُ الرَّسُوْلُ فَخُذُوْهُ وَمَا نَهٰىكُمْ عَنْهُ فَانْتَهُوْا

''நம்முடைய தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மன மொப்பி) எடுத்துக் கொள்ளுங்கள்! அவர் எதனை உங்களுக்குத் தடுத்துக் கொண்டாரோ அதிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங் கள்! (இவ்விஷயத்தில்) நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து (நடந்து) கொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் வேதனை செய் வதில் கடினமானவன்'' என்று திருக்குர் ஆன் (59:7) கட்டளையி டுகிறது. அத்திருமறை கூறும் வழியில், திருநபியின் வழிமுறை நெறியில் வாழும் பேற்றினை இறைவன் நமக்கு அருள்வானாக!

உரிமை பதிவு

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் | பதிப்பு | : | 20.01.1982 | |
| இரண்டாம் | பதிப்பு | : | டிசம்பர் | 1983 |
| மூன்றாம் | பதிப்பு | : | அக்டோபர் | 1990 |
| நான்காம் | பதிப்பு | : | ஏப்ரல் | 1992 |
| ஐந்தாம் | பதிப்பு | : | ஏப்ரல் | 1996 |
| ஆறாம் | பதிப்பு | : | அக்டோபர் | 2002 |
| ஏழாம் | பதிப்பு | : | அக்டோபர் | 2003 |
| எட்டாம் | பதிப்பு | : | நவம்பர் | 2003 |
| ஒன்பதாம் | பதிப்பு | : | டிசம்பர் | 2004 |
| பத்தாம் | பதிப்பு | : | ஆகஸ்டு | 2005 |
| பதினொன்றாம் | பதிப்பு | : | நவம்பர் | 2006 |
| பன்னிரெண்டாம் | பதிப்பு | : | பிப்ரவரி | 2007 |
| பதிமூன்றாம் | பதிப்பு | : | டிசம்பர் | 2008 |
| பதினான்காம் | பதிப்பு | : | டிசம்பர் | 2009 |
| பதினைந்தாம் | பதிப்பு | : | ஜனவரி | 2010 |
| பதினாறாம் | பதிப்பு | : | செப்டம்பர் | 2010 |
| பதினேழாம் | பதிப்பு | : | பிப்ரவரி | 2011 |
| பதினெட்டாம் | பதிப்பு | : | ஆகஸ்டு | 2012 |

---

கணினி அச்சுக்கோர்ப்பு : நம் பிராசஸ், போன் : 2433 18 08

அச்சிட்டோர் : மணி ஆப்செட், திருவல்லிக்கேணி, சென்னை - 5.